## கபாடபுரம்

### "புதுமைப் பித்தன்" கதைகள்

விமர்சனப் புலவர் பேராசிரியர். ரா. ஸ்ரீ. தேசிகன் எம். ஏ. அவர்கள் கூறுவதாவது:

'புதுமைப் பித்தன்' கதைகளுக்கிடையே திரியும்போது ஒரு—கவி யுலகிலே திரிகிற உணர்ச்சி எனக்கு வருகிறது. இவருடைய கதை ஒவ்வொன்றும் ஒரு தனி அனுபவ முத்திரை பெற்றிருக்கிறது. ஒவ்வொன்றி லும் உண்மையின் நாதம் தொனிக்கிறது. இவருடைய சில கதைகளை ரஸம் ததும்புகிற பாடல்கள் என்றே சொல்லிவிடலாம். "புது மைப் பித்தன்" முகம் எனக்குத் தெரியாது. ஆனால் அவர் அகத்தை நான அறிகிறேன். அவருடைய கதைகள் அவர் உள்ளத்து ரகசி யங்களை எ குப் பறையடிக்கின்றன. ஒரு கவியுள் சோகத்திலை சாம்பிய கவி யுள் ளம்- வாழ் கை முட்களில் விழுந்து இரத்தம் கக்குகிற உ ம்—கதைகள் மூலம் பேசுகி றது. இது நான் கண்டது இந்தக் கதைக் கோத்திலே."

208 பக்கங்கள்-காலிகோ பவுண்டு-விலை ரூ. 3.

## ப லி பீ ட ம்

### ருஷ்ய நாவல்

மூல ஆசிரியர்: அலெக்ஸாண்டர் குப்ரின்

மொழிபெயர்ப்பாளர்: புதுமைப் பித்தன் & க. நா. சுப்ரமண்யம்

இது நீதி போதிக்கும் நூல் அல்ல. உள் ளதை உள்ளபடி சொல்லி அதில் வாசகர் களுக்கு அருவருப்பு ஏற்படும்படி எழுதப் பட்ட நாவல் இது. யாமா என்கிற இந்த நூல் தனிப்பெருமை வாய்ந்தது. விபசாரி களைக் கதாநாயகிகளாக வைத்து எழுதப் பட்ட பல நாவல்கள் இருக்கலாம். ஆனால் சதை வியாபாரத்தையே விஷயமாக வைத்து தாசிக்குப் பதில் தாசித் தொழிலையே கதா நாயகியாக வைத்து எழுதப்பட்ட இந்த நூலில் ரஷ்யாவில் மட்டுமல்ல உலகத்தி லுள்ள பலிபீடங்கள் எல்லாவற்றிற்குமே நிரந்தரமான உருவம் கொடுத்திருக்கிறார் குப்ரின் என்பதுதான் இந்த நூலின் தனிச் சிறப்பு.

காலிகோ பவுண்டு விலை ரூ 3.

## கு த் பா பி ர ச ங் க ம்

**முற்றிலும் புதுமையானது!**

**நீங்கள் இதுவரை காணாதது!!**

பள்ளிவாசல்களில் கூடியிருப்பவர்கள் குறட்டைவிட்டுத் தூங்கிய போதினும், அரபி மொழியிலேயே குத்பாவை ஓதி அவர்களைத் தாலாட்டி மேலும் உறங்க வைத்தாலும் வைக் கலாமே யொழிய, ஜும்ஆ பிரசங்கங்களைத் தாய்பாஷையில் புரியக் கூடாது என்று தொண்டை கிழியக் கத்தித் திரிந்த முரடர்களின் காலம் அஸ்தமித்துப் போய்விட்டது. தமிழ் நாட்டிலே முதன் முதலாகத் தமிழ் மொழியில் **குத்பா பிரசங்கம்** என்னும் நூலை நாம் 1930 ஜனவரியில் வெளியிட்டுப் பெரும் புரட்சியை உண்டுபண்ணினோமென்பதை நீங்களறிவீர் கள். அவ்வபூர்வ பிரசங்கநூலின் **புதிய மூன்றும் பதிப்பு** இப்போது வெளிவந்துளளது. ஒவ்வொரு குத்பாவின் ஆரம்பத்திலும் இறுதியிலுமுள்ள ஹம்தும் ஸலவாத்தும் பழைய பதிப்புக்களிலுள்ளபடி அரபிலேயே இருப்பதுடன், **ஒவ்வொரு குத்பாவின் இறுதியிலும் ஓத வேண்டிய பொருத்தமான குர் ஆன் ஆயாத்கள் மிகுந்த சிரமத்தின்மீது பொறுக்கியெடுத்து அச்சிடப்பட்டுள்ளன.** இப் புஸ்தகத்தை ஏந்தி மின்பரில் ஏறும் இமாம் வேறு எவர் துணையு மின்றி குத்பாவை அழகாகவும், அமைப்பாகவும், அந்தஸ்தாகவும், கேட்பவர் சற்றுமே உறங்க முடியாதபடியும் சரளமாகப் பிரசங்கம் புரியலாம். தமிழ் நாட்டில் இத்தனை அமசங்களுடன் கூடிய குத்பா நூல் இன்றுவரை வேறெங்குமே வெளிவந்ததில்லை. தற்காலநவீன அரசியலுக் கொத்த குத்பாக்களாகச் சில பிரசங்கங்கள் இப் புதிய மூன்றும் பதிப்பில் திருத்தியமைக்கப் பட்டிருப்பன குறிப்பிடத் தக்கன. விலை ரூ. 3—4—0. தபால் செலவு தனி. உடனே வாங்கிப் படியுங்கள்.

**ஷாஜஹான் புக் டெப்போ, சென்னை-5.**

# "நபிகள் நாயக மான்மியம்"

### (முதற்பாகம்)

29 அதிகாரங்கள்: ஹி. ஆருவதாண்டு. அஹ்ஜாப் யுத்தம் முடிய.
இலக்கிய உலகில் தனிப் பெரும் புரட்சி!

பல்லாயிரக் கணக்கான ரூபாய்கள் அள்ளிச் சொரியப்பட்டு, அழகினும் அழகிதாய் வனப்பினும் வனப்பதாய், பல மூவர்ணக் கலர்ப் படங்களுடன் இந்த "தாருல் இஸ்லாம்" பத்திரிகை எந்த அளவில் இருக்கிறதோ அதே அளவில் 600 பக்கங்களுடன், தயாரிக்கப்பட் டுள்ளது. மிகப்பிரமாதமான பைண்டு செய்யப்பட்டது. 3-வர்ண ஆர்ட் ஜாக்கெட் போர்த் தப்பட்டது. பார்ப்போர் கண்ணைப் பறிக்கத்தக்கது!

இப் பாருலகின் கீர்த்தி மிக்க ஜயதிலகமாய் விளங்கும் எம்பிரான் முகம்மது நபி (சல் அம்) அவர்களின் மெய்யான ஆதார பூர்வமான அபூர்வ சரித்திரம். நாம் முன்னம் வெளி யிட்ட முதல் பதிப்பைவிட, இதில் 9 அதிகாரங்கள் அதிகமாக சேர்க்கப்பட்டுள்ளன. அறு சுவையுடன் கூடிய இனிய விருந்தில் வயிறு நிரம்ப உண்டு விட்டு மெய்ம்மறந்து திரியும், மனிதனுக்கு ஏற்படும் மகிழ்ச்சியைவிட, இலக்கிய உலகில் இந்நூல் அளிக் இணையற்ற இன்பத்தை வாயால் வருணிக்க இயலுமோ, இயலுமோ?

இவ்வபூர்வ இலக்கிய சரித்திர ஆராய்ச்சி பொக்கிஷம் ஒவ்வொரு நூல் நிலையத்திலும், மத்ரஸாவிலும், கல்லூரியிலும், வாசகசாலைகளிலும் பொது மக்கள் நற்பயனடைவதற்காக அத்தியாவசியமாய் இருக்கவேண்டிய அரும் பெரும் பாக்கியமாகும்.

விலை. ரூ. 12. தபாற் செலவு 1—6—0 தனி.

---

# இஸ்லாம்

### (11—ஆம் பதிப்பு)

மிகப் பெரும்பாலான தமிழ் நாட்டு முஸ்லிம்கள் சென்ற முப்பதாண்டுகளாக ஈமான், தொழுகை. நோன்பு ஜக்காத், ஹஜ் என்னும் ஐந்து பாலான கடமைகளையும் பிறர் உதவி யின்றி தமிழில் கற்றுத் தேர்வதற்கு எமது இஸ்லாம் ஒன்று மட்டுமே பேருதவியா யிருக்கிற தென்பதை எல்லாரும் நன்குணர்வர். ஷாபி. ஹனபீ ஆகிய இரு மதுஹபுக்குரியவர்களும் இப்புஸ்தகத்தின் துணையொன்றை மட்டுமே வைத்துக்கொண்டு, எல்லா பர்லான, வாஜிபான, சுன்னத்தான சகல தத்துவங்களும் மஸ் அலாக்களுடன் இந்நூலில் இனிது வர்ணிக்கப்பட் டிருக்கின்றமையால், முழுப் பயனையும் பெற்றுக்கொண்டுவிட முடியும். பள்ளியிற் படிக்கும் சிறுவர் சிறுமியர் முதல், ஹஜ்ஜென்னும் இறுதிக் கடமையை முடிக்கச் செல்லும் வயோதிகர் ஈறாக ஒவ்வொருவரும் இதைத் துணையாகக் கொண்டு நன்மைபெற முடியும். தொழுகையின் ஒவ்வோர் அம்சமும் எப்படிப்பட்டவரும் நன்கு விளங்கிக் கொள்ளத் தக்கவாறு இனிது விளக்கப் பட்டிருப்பதைப்போல், ஹஜ் சம்பந்தமான ஒவ்வொரு கடமையும் விளக்கமாகவும், விவரமாகவும், நுணுக்கமாகவும் தீட்டப்பெற்றிருக்கின்றன.

விலை. ரூ. 3. தபால் செலவு தனி.

**ஷாஜஹான் புக் டெப்போ,**

**460, திருவல்லிக்கேணி ஹைரோட் :: சென்னை-5**

Bleed through

## பொருள் அடக்கம்



## அட்டைப் படம்

மத்தியக் கிழக்கு நாடுகளெல்லாம் சொல்லொணுக் கவலையுள் மூழ்கும்படி, சென்ற நவம்பர் மாதம் ஒன்பதாந் தேதியன்று அரப்நாட்டின் அதிபதியாய் விளங்கிவந்த மன்னர் பிரான் அப்துல் அஜீஜ் இப்னுசுஊத் இம் மண்ணுலக வாழ்வை நீத்தார். (இன்னலில்லாஹி வ இன்ன இலைஹி ராஜிஊன்). அவர் விட்டுச் சென்ற காலியான ஸ்தானத்திலே அவருடைய மைந்தர் அமீர் சுஊத் மன்னராக உயர்த்தப்பட்டார். இப்புதிய மன்னரின் புகைப்படமே நம் இவ்விதழின் மேலட்டையை அலங்கரிக்கிறது. காலஞ்சென்ற இப்னு சுஊதுக்கு 150 மைந்தர்கள் இருக்கிருர்களென்று சொல்லப்படுகிறது. அவர்கள் அத்தனை பேரும் தந்தையின் காலகதிக்குப் பின்பு பட்டம் ஏறுகிற விஷயத்தில் வீண் தகராறுகளை விளைத்துக்கொள்ளா திருப்பதற்காக, 1935-ஆம் ஆண்டிலேயே இப்னு சுஊத் ஓர் அறிக்கையைப் பிரகடனப்படுத்தி, அமீர் சுஊதே பட்டத்திளவரசர் என்பதைப் பகிரங்கப்படுத்தி யிருந்தார். அந்தப் பிரகடனத்தை மற்ற இளவரசர்களும், பாலைவனத் தலைவர்களும் ஒருமுகமாக ஏற்றுக்கொண் டிருந்தனர். அப்பிரகடனத்துக் கொப்பவே இப்போது அமீர் சுஊத் ஹிஜாஜின் மன்னராக உயர்ந்திருக்கிருர். இந்த அஞ்சாத வீரம் படைத்த மன்னர் அவருடைய தந்தையின்கீழ்த் தக்க பயிற்சிகளைப் பெற்றுப் பழகியவர். கொதிக்கிற மணல் வெளிகளிலே வெற்றுக் காலுடன் நடந்து ஓடவும், குதிரைமீது ஜேணமின்றி ஏறிச் சவாரி செய்யவும், வாள்களையும் துப்பாக்கிகளையும் வெகு லாவகமாய்ப் பயன்படுத்தவும் அமீர் சுஊதுக்கு இப்னு சுஊத் மிக நன்ருய்ப் பயிற்சி யளித்திருந்தார். இன்றுங்கூட இந்தப் புதிய மன்னர் எந்த பதவியையும் நேருக்குநேர் எதிர்த்துநின்று போர் புரியக்கூடிய திறமையையும் சாமர்த்தியத்தையும் நன்கு பெற்றிருக்கிருர். எனவேதான், சென்ற 1935 ஹஜ்ஜின்போது இப்னு சுஊத் மன்னரையும் இந்த இளவரசரையும் கொல்ல முயன்ற எமன் வாசிகளான ஜைதீகள் மூவரை இந்த அமீர் சுஊத் மிகத் தைரியமாகப் பிடித்துத் தள்ளிக்கொன்று, தம்மையும் தம் தந்தையையும் தற்காத்துக் கொண்டார். அந்த ஜைதீகளின் குறியை மட்டும் இவர் தடுத்துக் காத்திராவிட்டால் இவரும், இப்னு சுஊதும் அந்த 15—3—1935 அன்றே பரிதாபகரமாய்க் கொலையுண்டிருப்பார்கள்.

இவ்வளவு பெரிய வீரதீரரான பராக்கிரமசாலி சுஊதி அரேபியாவின் மன்னராகத் திகழ்கிருர். இவருக்கு மேனுட்டுக் கல்விஞானமும் அதிகமுண்டு. ஆண்டவன் இப்புதிய மன்னருக்கு நீண்ட ஆயுளைத் தந்து ரக்ஷிப்பானுக!


வருட சந்தா
உள்நாடு, சிலோன் ரூ. 4-8-0

பர்மா, மலேயாவுக்கு ரூ. 6-0-0

DARUL ISLAM TAMIL MONTHLY

# தாருல் இஸ்லாம்

ESTD - 1919

(தமிழகத்தில் மிகப் புராதன முஸ்லிம் பத்திரிகை)

நிர்வாக ஆசிரியர்: அல்ஹாஜ், பா. தாவூத்ஷா, பீ. ஏ.

| மலர் 33 | ஹிஜ்ரி 1373, ரபீஉல் ஆகிர் மீ — 1953, டிசம்பர் மீ | இதழ் 12 |
|---|---|---|


## ஸிரியாவில் பத்திரிகை நடத்தப் புதிய சட்டம்

ஸிரியாவின் தலைநகராகிய திமஷ்கிலே (டெமாஸ்கஸிலே) சென்ற அக்டோபர் 12-ஆம் தேதி வெளிவந்த செய்தி யொன்றில், புதிய சட்ட மொன்று பத்திரிகைத் தொழில் சம்பந்தமாகவும் பிரசுரங்கள் வெளியிடப்படுவது சம்பந்தமாகவும் பிறப்பிக்கப் பட்டிருப்பதாக அறிவிக்கப்பட்டுள்ளது. அந்தச் சட்டம் ஐந்து பிரிவுகளுடையதாகப் பிரகடனப்படுத்தப்பட் டிருக்கிறது. அச்சாபீஸ் (பத்திரிகை), நூல் நிலயங்கள், பிரசுரம் வெளியிடும் ஸ்தாபனங்கள் அச்சிடப்பட்ட வற்றைப் பரத்தும் அலுவலகங்கள், சுவரொட்டித்தாள்கள், அறிக்கை வெளியிடுகள் முதலியவற்றைக் கட்டுப்படுத்தும் விதிகள் அந்தச் சட்டத்திலே உருவாக்கப்பட்டுள்ளன. ஒரு பிரத்தியேகப் பிரிவிலே பத்திரிகைக் காரியாலயங்கள் புரியும் குற்றங்களும், அவற்றுக்கு என்னென்ன தண்டனைகள் வழங்கப்பெறும் என்னும் விவரங்களும் விளக்கப்பட் டுள்ளன.

எந்தவொரு ஸிரிய அரசியல் கட்சியோ அல்லது கம்பெனியோ பத்திரிகைகளை வெளியிட உரிமை யிருக்கிறதென்றும், ஆனல் அரசியல் சம்பந்தமான விஷயங்களைத் தாங்கி வெளி வருகிற தினசரிப் பத்திரிகைகளை நடத்த அனுமதி பெற்றவர்கள் குறைந்த பக்ஷம் ஐந்து ஆண்டுகள் வரையிலேனும் ஸிரியா நாட்டுப் பிரஜையாக வசித்திருத்தல் அவசியமென்றும் அந்தச் சட்டம் வலியுறுத்துகிறது. பத்திரிகை யாசிரியரின் வயது 25-க்குக் குறைந்திருக்கக்கூடாது. அவர் அந்நாட்டி லுள்ள வேறெந்த வெளி நாட்டினரின் ஸ்தாபனத்திலோ அல்லது வெளி நாடுகளிலோ எப்படிப்பட்ட உத்தியோகத்தையும் வகிக்கக் கூடாது.

ஒரு பத்திரிகையின் ஜவாப்தாரியான மானேஜரும், அதன் பிரதம ஆசிரியரும் அந்தப் பதவி வகிப்பதற்குத் தகுதியான நற்சாட்சிப் பத்திரத்தைப் பெற்றிருக்கவேண்டும்; அல்லது இந்தச் சட்டம் அமலுக்கு வந்தவுடன், முன்னமே பத்திரிகை நடத்திக் கொண்டிருப்பவர்கள் குறிப்பிட்ட காலத்துக்குப் புதுப் புது லைஸென்ஸ்களைப் பெற்றுக் கொள்ளவேண்டும்; அல்லது ஒரு இரண்டாந்தரமான ஸர்ட்டிபிகேட்டும், பத்திரிகை நடத்துவது எப்படி யென்று பயிற்சியளிக்கும் கலாசாலையிலிருந்து இரண்டு வருஷம் பயின்றதாக ஒரு ஸ்பெஷல் பிரஸ் ஸர்ட்டிபிகேட்டும் பெற்றிருக்கவேண்டும்; அல்லது வேறொரு பத்திரிகை யாபீஸில் குறைந்த பக்ஷம் பத்து வருஷங்களேனும் இருந்து போதிய அனுபவம் பெற்றிருப்பதாக அத்தாட்சிப்பத்திரம் வாங்கியிருக்க வேண்டும். இந்த நிபந்தனைகளுக்குக் கட்டுப்படாதவர் எவரும் பத்திரிகை யொன்றைத் தம்மிஷ்டத்துக்கு ஆரம்பிப்ப தென்பது அறவே இயலாது.

(37-ஆம் பக்கம் பார்க்க)

DARUL ISLAM ✦ TAMIL MONTHLY ✦
தாருல் இஸ்லாம்
ESTD. 1919

டிசம்பர் 1953, சென்னை - 5

# அப்துல் அஜீஜ் இப்னு சுஊத்

அரப் நாட்டின் அதிபதியாய் விளங்கி வந்த மாபெரும் மன்னர் அப்துல் அஜீஜ் இப்னுசுஊத் சென்ற மாதம் இம் மண்ணுலக வாழ்க்கையை நீத்த பெருந்துயரகரமான செய்தியைக் கேட்டு உலக முஸ்லிம்கள் பேரதிர்ச்சியுற்று விட்டனர். அரப் நாட்டின் ஹிஜாஜ் பகுதியை மிகவும் பந்தோபஸ்து மிக்க ஸ்தலமாக மாற்றிவிட்ட அப் பெரியார் தமது வயது முதிர்ந்த பருவத்திலேயே காலஞ்சென்றுரென்றாலும், அகில உலக முஸ்லிம்களும் அவரைப் பிரிந்த துயரை மறக்க வெகு காலஞ் செல்லும். ஏனென்றால், அவர் உலக முஸ்லிம்களின் உள்ளத்திலே மிக ஆழமாய் வேரூன்றச் செய்த அன்பும் அபிமானமும் என்றென்றும் நிரந்தரமாகவும் சாசுவதமாகவும் நம்மிடையே நின்றிலங்கப் போகின்றன.

இப்னுசுஊத் ஒரு வெறும் மன்னராகப் பெயரளவில் மட்டும் விளங்கிவர வில்லை; ஆனால், மாபெருஞ் சீர்திருத்த வாதியாகவும் திகழ்ந்து வந்தார். மக்கா, மதீனா, தாயிப் முதலிய புனித ஸ்தலங்கள் அடங்கிய ஹிஜாஜ் மாகாணத்தின்மீது அரைகுறை ஆட்சி செலுத்திவந்த ஷரீப் ஹுஸைனின் கரத்திலிருந்து 1927-இலேதான் இப்னுசுஊத் அரசாட்சியைப் பற்றினர். அன்று முதல் இன்று வரை அந்த அரப் நாடு பெற்றுக்கொண்ட மாட்சிமிக்க மகத்தான சீர்திருத்தங்களைச் சற்றே உற்றுக் கவனியுங்கள் :—

இப்னு சுஊத் ஒரு சுத்தவீரர். கொஞ்சமும் அஞ்சாத நெஞ்சுத் துணிவைக் கொண்டவர். அவருடைய கையின்கீழ் ஆட்சிவந்து அமர்ந்ததும் முதன் முதலாக அவர் முஸ்லிம்களின் இடையிலே நிலவிவந்த அனுசாரங்களை அடியுடன் ஒழித்துக் கட்ட முற்பட்டார். தவ்ஹீதான ஏகதெய்வக் கொள்கைக்கு ஈமான் கொண்டு நிற்பதாகக் கூறிக்கொள்ளும் முஸ்லிம்கள் பலர் இஸ்லாமிய பெரியார்களின், தியாகிகளின்கப்ர்களினெதிரேசொல்லொணு ஷிர்க்குகளையும் பித்அத்துகளையும் புரிந்து அழிச்சாட்டியம் பண்ணுவதைத் தொலைத்துத் தீர்ப்பதற்காக, அரப் நாட்டிலிருந்த எல்லாவிதமான கப்ர்களையும் (ரௌலா ஷரீபைத் தவிர) இடித்துத் தரைமட்ட மாக்கினர். நபிகட் டிலகம் (சல்) அடக்கமாகி யிருக்கும் அந்த ரௌலா ஷரீபுங்கூட ஒரு ஞாபகார்த்த சின்னமாகவும், இஸ்லாமிய ஒழுங்கு முறைப்படி சரியான, ஒழுங்கான ஜியாரத் செய்வதற்கான புனித ஸ்தலமாகவுமே விடப்பட் டிருக்கிறது. அவ்லியா பூஜை, ஷஹீத் பூஜை, சஹாபா பூஜை முதலிய எந்த விதமான ஷிர்க்கும் அரப் நாட்டுக்குள்ளே தலைநீட்ட முடியாமல் செய்த பெருமை முற்றும் இப்னு சுஊதையே சாருமென்பதை மறவாதீர்கள். ஹஜ்ஜுக்கு யாத்திரை செல்லும் ஹாஜிகள் இரு கையேந்தி ஏக இறைவனிடம் மட்டுமே துஆ கேட்க வேண்டுமின்றி, ரசூலுல்லாவின் தர்பாரிலுங் கூட ஒன்றும் முறையிட்டுக் கொள்ளவோ, கையேந்தி நிற்கவோ கூடாதென்று செய்த அம்மன்னர் முஸ்லிம்களின் அகக் கண்களைத் திறந்துவிட்ட பெரிய ஜீவனுவார் என்பதில் ஐய முண்டோ? ஆண்டவனைத் தவிர்த்து, வேறெந்த மனிதனின் கப்ரெதிரிலும் எவரும் சிரம் வணங்கக் கூடாது என்னும் மகத்துவமான பெருமையை அப்பழுக்கில்லாமல் நிலை நாட்டிய பெரியார் அந்த இப்னுசுஊத் என்பதை உலக முஸ்லிம்கள் என்றென்றுமே ஞாபகத்தில் வைத்திருப்பர்.

ஷிர்க்குகள் ஒழிந்து ஹிஜாஜ் பகுதி பரிசுத்த மடைந்தவுடனே அவர் உடனடியாகக் கவனித்த சீர்திருத்தம், அப் பகுதியிலே விபசாரம், திருட்டு, சூது முதலியன தலைகாட்டாதபடி எடுத்துக்கொண்ட கடுமையான நடவடிக்கைகளாகும். இப்னு சுஊத் பதவிக்கு வருமுன்னே அரப்நாட்டுக் காட்டரபிகள் பெயரளவில் முஸ்லிம்களா யிருந்தும், நடைமுறையில் கள்வர்களாகவும், திருடர்களாகவும், கொள்ளைக் கூட்டத்தினராகவுமே உயிர் வாழ்ந்து வந்தார்கள். எனவே, முற்காலத்திலெல்லாம் ஹஜ் செய்யச் செல்கிற ஹாஜிகளின் உயிரும் பொருளும் அக் கொள்ளைக் கூட்டத்தினரின் கொடிய குறிகளுக்கு இலக்காகியே தீர வேண்டியிருந்தன. விபசாரமும் எல்லைமீறி நிலவி வந்தது. இப்னு சுஊத் அரசரானர். திருடினல் கை தறிக்கப்படும், கள்ளப் புணர்ச்சி செய்தால் சவுக்கடி கொடுக்கப்படும் என்னும் கடுமையான ஷரீஅத் சட்டங்களை உடனடியாக அமலுக்குக் கொண்டுவந்தார். அதன் விளைவாக, இன்று ஹிஜாஜ் பகுதி எவ்வளவு அப்பழுக்கற்ற நேர்மையான பந்தோபஸ்து நிலவும் உன்னதமான நாடாகத் திகழ்கிற தென்றால், சென்ற 1948-இல் "ஆயிரக் கணக்கான வெள்ளி நாணயங்கள் ஜித்தாவிலிருந்து மக்காவுக்குப் போகும் பாதை நெடுகச் சிதறப்பட்டுக் கிடந்தன; அவற்றுள் ஒரே ஒரு நாணயத்தைக்கூட எவனும் திருடியெடுத்துக் கொள்ளவோ, அல்லது திருட யத்தனிக்கவோ முற்படவில்லை," என்று 'ஸண்டே ஸ்டாண்டர்டு' என்னும் லண்டன் சஞ்சிகை அப்போது எழுதியிருந்தது. இதேபோல், அரப் நாட்டிலுள்ள எந்தப் பெண்ணையும் நீங்கள் ஹலாலான முறைப்படி மனைவியாகக் கொள்ள முடியுமே யொழிய, அவளை நீங்கள் ஹராமான வழியில் தீண்ட அறவே முடியாது. இப்னு சுஊதின் நாட்டிலே மட்டுந்தான் இன்றைத் தினத்தில் ஒரு திருடனே, ஒரு வியபிசாரியோ காணப்படவில்லை யென்றால், இந்தப் பெருமைக்கு இணைவேறு என்ன இருக்கிறது?

முஸ்லிம்கள் தங்கள் பர்லான கடமையாகிய ஹஜ்ஜை நிறைவேற்றிக் கொள்வதற்காக ஆண்டுக் கொருமுறை இவ்வுலகின் எண்டிசையிலிருந்தும் வந்து குழுமுகிற முக்கியமான கேந்திர ஸ்தானம் எல்லாத் துறைகளிலும் சீர்திருத்தம் பெற்றதாகவும், சகல சௌகரியங்களும் வசதிகளும் பொருந்தியதாகவும் உயர்த்தப்பட வேண்டுவது முதல் அவசிய மென்பதை அம் மன்னர் உணர்ந்தார். எல்லா மக்களுக்கும் பந்தோபஸ்து செய்து கொடுப்பதற்காக அவர் ஹாஜிகளிடமிருந்து வரி வசூலித்தா ரென்றாலும், அதன் மூலம் வந்த வரும்படியைக் கொண்டு அவரால் ஏதும் அதிகமாகச் சாதிக்க முடியவில்லை. கிடைத்த வருமான மெல்லாம் பொலீஸுக்கும், ஷெய்குகளுக்கும் சம்பளமாகக் கொடுக்கப்படுவதிலேயே செலவழிந்து வந்தன. மேலும், அரப் நாட்டுப் பாலைவனத்தில் விளை பொருளேதும் இன்மையால், உள்நாட்டு வருமானம் ஒன்றுமில்லாதிருந்தது. ஆனால், தெய்வாதீனமாக—ஆண்டவன் நாடிய வண்ணம், உலகிலுள்ள எண்ணெய்க் கிணறுகளில் நான்காவது ஸ்தானம் வகிக்கத்தக்க அளவில் சுஊதி அரேபிய நாட்டில் எண்ணெயூற்றுக்கள் கண்டுபிடிக்கப்பட்டன. அமெரிக்கன் ஆயில் கம்பெனி என்னும் அமெரிக்க ஸ்தாபனம் எண்ணெய் வடிக்கத் தொழிற்சாலைகளையும், எண்ணெயூற்று ஆலைகளையும் நிர்மாணிக்கத் தொடங்கிற்று. 'திரவத் தங்கம்' என்று அழைக்கப்படும் பெட்ரோலும், குருட் ஆயிலும் டன் கணக்கில் தோண்டி யெடுக்கப்பட்டு அரப் நாடு குபேர நாடாக ஆகிவிட்டது. ஆண்டுதோறும் எண்ணெய் வருமானத்தில் பாதியை இப்னுசுஊத் அடைய வேண்டுமென்னும் உடன்படிக்கை கையெழுத்திடப்பட்டபடியால் சென்ற 15 ஆண்டுகளாக அவர் கோடிக் கணக்கான பவுன்களையும் டாலர்களையும் சம்பாதித்து விட்டார். மற்ற ஏகபோக அரசர்கள் செய்ய நாடுவதைப்போல் இப்னுசுஊத் அப் பெருஞ் செல்வக் குவடுகளைத் தம் சுயநலத்துக்குப் பயன்படுத்திக் கொள்ள முற்படாமல், அவ்வளவு நிதியையும் அரப் நாட்டுச் சீர்திருத்தத்துக்கும், கைத்தொழில் வளப்பத்துக்கும், மக்களின் பஞ்சத்தைப் போக்குவதற்குமே அள்ளியள்ளி வீசத் தொடங்கினர். இதனலேயே அவரை மக்கள் "அரப் நாட்டின் அதிபதி" என்னும் சிறப்புப் பெயரிட்டழைக்கவும் தொடங்கிவிட்டனர். மண்ணுக்குக் கீழேயிருந்து அகப்படும் செல்வத்தை அம்மன்னர் மண்ணின்மேல் வாழும் மக்களுக்காகத் தக்க முறையில் பகிர்ந்து நற்பயன்படுத்திய பெற்றியை யாரும் குறைத்துக் கூறமுடியாது.

ஆங்கிலேய ரொருவர் சில காலம் சுஊதி அரேபியாவில் தங்கியிருந்து, எல்லாவற்றையும் நேரில் கண்டும் கேட்டும் இறும்பூதெய்தி மெச்சிப் புகழ்ந்து, லண்டனிலிருந்து வெளிவரும் பத்திரிகை யொன்றிலே வரைந்திருந்த நீண்ட கட்டுரையிலிருந்து ஒரு பகுதியை எடுத்துத் தருகிறேம் :—

*"முன்பெல்லாம் அரபு நாட்டிலிருந்த பிரயாண பயங்கள் இப்போது முற்றும் அழிக்கப்பட்டு விட்டன. அப்புனித தேசத்தின் அதிபதியாக இப்னு சுஊத் உயர்வதற்கு முன்னே, அநேக ஆண்டுகளாகப் பணம் வைத்துக் கொண்டிருந்த பெரிய மனிதர்கள் மட்டுமே ஒட்டகத்தில் ஏறிப்போக முடியும். இதனல் பலவித அசௌகரியங்கள் இருந்ததுடன், சொல்லொணுக் கொடுமைகளும் நிகழ்ந்தன. தக்க பந்தோபஸ்தோ அல்லது பாதுகாப்போ இல்லாமையால், யாத்திரிகர்கள் ஏறிச் செல்லும் ஒட்டகக் கார்வான்கள் போகும் வழி நெடுகே யுள்ள பதவீ கூட்டத்தின ரெல்லாம் அந்தக் கார்வான்களுக்குப் 'பாதுகாப்பு' அளிப்பதற்காக ஏராளமான திரவியத்தைக் கப்பமாக வசூலித்து வந்தனர் அந்தக் கூட்டத்தினர்கள் தங்களுக்கிடையிலேயே*

ஒழியாத சண்டை சச்சரவுகளில் முட்டிக் கிடந்தமையால், பதவிகளுக்குக் கப்பங் கொடுத்த பின்னரும் தாங்கள் பந்தோபஸ்தாகச் செல்ல முடியுமென்று யாத்திரிகர்கள் திருப்தியுற முடிவதில்லை. என்னெனின், கார்வானில் போகிற பிரயாணிகளிடம் அந்த பதவீகள் கொள்ளையடித்துக்கொண்டிருக்கையிலேயே, வேறு பிரிவினர்கள் இவர்கள்மீது பாய்ந்துகொலையும் கொள்ளையும் புரிந்து விடுவார்கள். எனவே, ஆண்டுதோறும் ஆயிரக் கணக்கான யாத்திரிகர்கள் தங்கள் பொருள்களையும் உயிர்களையும் பரிதாபமாக இழந்து வந்தனர். ஆனால், இப்னு சுஊதின் மிகக் கடுமையான சட்ட திட்டங்கள் ஒரு பிரகாசமான ஒளி ரேகையை உதிக்கச் செய்து விட்டன. தம் தேசத்திலே திருட்டுக் குற்றம் புரிந்தவருக்குத் தண்டனை, குற்றவாளியின் கைகளை மணிக்கட்டுவரை வெட்டி யெறிவதே யென்று அறிவிக்கப்பட்ட வுடனே எல்லாம் மிக ஒழுங்காகி விட்டன. இன்று உலகிலுள்ள மிகவும் பத்திரமான நாடுகள் அனைத்துள்ளும் தானே முன்னணியில் சிறந்து நிற்பதாக அந்த சுஊதி அரேபியா தற்பெருமையுடன் அறைகூவி யழைக்கிறது....... மக்கத்துக்குப் போகும் பாதை நெடுகிலுமுள்ள ரஸ்தாவில் இப்னு சுஊதின் பொலீஸ் நின்று கொண்டு கார்வான்களைப் பாதுகாக்கின்றது......ஆதிமுதல் அந்தம் வரை அந்த மன்னர் பிரான் இப்னு சுஊத் ஒவ்வொரு யாத்திரிகனுக்கும் எல்லா அம்சங்களிலும் பேருதவியே புரிந்து வருகிறார். அவர் தம் நாட்டு எண்ணெய்களுக்குப் பெறுகிற உபரி வருமானத்தைத் தேசத்தின் நன்மைக்காகவே செலவிடுகிறார். அன்றியும், ஒவ்வோராண்டிலும் யாத்திரை வருகிறவர்களுக்கும் நிரம்ப வசதியளிக்கிறார். இதற்குப் பிரதியாகவே அவர் யாத்திரிகர்களின் செல்வத்தை உபயோகித்து, தம் நாட்டு இயற்கை வளத்தை இன்னமும் முன்னேறச் செய்துகொண்டு விடுகிறார்."

இங்ஙனமெல்லாம் அன்னியர்களாலும் புகழப்பட்டு, அபூர்வமான நற்சாட்சிகளை வழங்கப்பெற்ற பெரியார் இப்போது மண்ணிடையிருந்து மறைந்துவிட்டாரென்றாலும், அவர் அழியாமல் விட்டுச்சென்ற செம்மைகான சீர்திருத்தங்களும் அருமையான பண்புகளும் என்றென்றும் உலகில் ஜீவித்தே இருக்கப்போகின்றன. நபிகட் டிலகம் (சல்) திருவவதாரம் புரியுமுன்னர் அந்த அரப் நாடு அந்தகாரமென்னும் 'அய்யாமுல் ஜாஹிலியத்'திலே மூழ்கிக்கிடந்தது. அம்மஹான் தோன்றியவுடனே அந்நாட்டிலும், உலகிலும் சூழ்ந்திருந்த காரிருள் காற்றுப் பறந்துவிட்டது. ஆனாலும், மனிதனென்பவன் பல ஹீனனாகவே இருந்து வருவதால், மக்கத்துக் குறைஷிகளும் அரப் நாட்டு பதவீகளும் இஸ்லாத்தைத் தழுவிக்கொண்ட பின்னரும் வேறு வகையான ஷிர்க்குகளிலும், கொள்ளை கொலை முதலிய துஷ்கிருத்தியங்களிலும் இருந்தே கிடந்தனர். அப்படிப்பட்ட சட்ட விரோதம் புரியும் பாதகர்களை அடக்கியொடுக்கி நேர்மையை நிலைநாட்டவென்றே இப்னு சுஊத் என்னும் முன்மாதிரியான மன்னரை இறைவன் அனுப்பிவைத்தானே என்று எண்ணவேண்டியிருக்கிறது. மிகவும் கடுமையான முறையில் அவர் ஷரீஅத் சட்டங்களை அமல் நடத்திக் காட்டிய ஏகபோக மன்னராக விளங்கினாரென்று அவரைச் சிலர் குறை கூறுகின்றனர். ஆனால், இஸ்லாத்தில் எல்லாரும் சமமாகையால், எவர் குற்றமிழைப்பினும் அவருக்கேற்ற சரியான தண்டனை வழங்கப்பட்டு வந்தது. இந்த நேர்மையானபாதையைக்கடைப்பிடித்தமைக்காக அவரை யாரும் குறை கூற முடியாது. ஜனநாயகத்தின் பெயரால் இன்று உலகின் பல நாடுகளில் காணப்படுகிற "தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவர்கள்" என்போர் சாதிக்க முடியாத பெருஞ் சாதனைகளை அந்த 'ஏகபோக மன்னர்' என்று அழைக்கப்படும் மன்னராலே மட்டுமே சாதிக்க முடிந்தது.

வாழ்க இப்னு சுஊதின் பெரும் புகழ்!

"ஏ இறைவனே! முஸ்லிம் சமூகத்துக்குப் பொதுவாகவும், ஹிஜாஜ் பகுதி முஸ்லிம்களுக்குச் சிறப்பாகவும் சொல்லொணா நன்மைகளைப் புரிந்து சென்ற அப்துல் அஜீஜ் இப்னு சுஊதை உன்னளவில் உயர்த்திக் கொள்வாயாக! அவரை உனது குளிர்ச்சியான சுவர்க்க நிழலிலே என்றென்றும் தங்கியிருக்கச் செய்வாயாக! அவர் ஏதும் குற்றங் குறைகள் புரிந்திருப்பின் நீ மன்னிப்பாயாக! அதற்காக அவரைத் தண்டிக்க நீ பற்றிப் பிடிக்காதிருப்பாயாக!" என்று நாமனைவோம் ஆண்டவனிடம் குறையிரந்து வேண்டுதல் புரியக்கடவோம்!



# அரிமா நோக்கு



## ஹிந்தி லிபியில் தமிழ்!

பலருக்குப்பலதினுசான பித்துக்கள் பிடிப்பது வழக்கம். இப்போது நம் நாட்டிலுள்ள சில விவேகிகளுக்கு அம்மாதிரியான ஒரு புதுப் பித்துப் பிடித்திருக்கிறது. என்னவென்றால், ஹிந்தி பாஷை பேசுபவர்கள் பிற மொழிகளைச் சுலபமாகக் கற்பதற்கும், பிற மொழி பேசுவோர் இலகுவாக ஹிந்திகற்றுக் கொள்வதற்கும் சில ஹிந்தி பக்தர்கள் குறுக்கு வழி யொன்றைக் கண்டுபிடித் திருக்கிறார்கள். அவர்கள் சென்ற 29-11-53 அன்று லக்ஷ்மணபுரியில் கூட்டிய "நாகரிலிபி சீர்திருத்த மகாநாட்டிலே" கவைக்குதவாத விஷயங்களைப் பேசியிருக்கிறார்கள். ஒருவர் பேசிய பேச்சு மற்றொருவர் பேசிய பேச்சுக்கு முரண்பட்டுக் காணப்படுவது ஒருபுற மிருக்க, ஒருவரே முன்னுக்குப் பின் சம்பந்தமில்லாமலும் வாய்க்கு வந்தபடியும் உளறிக் கொட்டியிருக்கிறார்கள். அம் மகா நாட்டுக்குச் செய்தி விடுத்த திரு நெஹ்ருவின் வாசகமே இதற்கோர் எடுத்துக்காட்டு.

இப்போது ஹிந்தி பாஷை தேவநாகரிலிபி என்னும் எழுத்தால் எழுதப்பட்டு வருகிறது. அந்த எழுத்துக்களில் பல குறைபாடுகளிருப்பதால் அவற்றைச் செப்பஞ் செய்து சீர்திருத்த வேண்டும் என்று அந்த ஹிந்தி நிபுணர்கள் ஆரம்பித்தார்கள். ஆனால், அவற்றை எப்படிச் சீர்திருத்துவதென்பதையே அவர்கள் இன்னம் முடிவு செய்யாதிருக்கிற நிலையில், இந்தியாவிலுள்ள சகல பாஷைகளையுமே அந்த அநாகரிகம் பிடித்த ஹிந்தி தேவநாகரி லிபியில் தான் எழுத வேண்டும் என்று வீண் குதர்க்கம் விளைக்க முற்பட்டிருக்கின்றனர். அவர்கள் தேவநாகரி லிபியைச் சீர்திருத்திக் கொள்ளட்டும் அல்லது எப்படியாவது போகட்டும், நமக்கு அதைப் பற்றிக் கவலையில்லை. ஆனால், அவர்கள் பிற இந்திய மொழிகளையும்-தமிழுள்ளிட்ட சகல பாஷைகளையும் அதே நாகரி லிபியில் எழுதுவது என்று முரட்டுவாதம் செய்வதைத்தான் நாம்சிறிதும் வரவேற்கமுடியாது, எத் தமிழனும் வரவேற்க மாட்டான் என்பதை வன்மையுடன் தெரிவித்துக் கொள்ள ஆசைப்படுகிறோம்.

வடமொழி (ஸம்ஸ்கிருதம் உள்ளிட்ட) சகலவற்றுக்கு மில்லாத தனிச் சிறப்புத் தமிழுக்குப் பிரத்தியேகமாக உண்டு. அத் தனிச் சிறப்புக்களைத் தமிழெழுத்தால் மட்டுமே எழுத முடியுமன்றி, வேறெந்த உலகமொழி லிபியாலும் எழுதிக்காட்டமுடியாது. எனவே தான், நன்னூலாசிரியர் பவணந்தி முனிவரும் கூட, "றனழஎ ஒவ்வு(ம்) உயிர்மெய் யுயிரளபு, அல்லாச் சார்புந் தமிழ்பிற பொதுவே!" என்று கூறியுள்ளார் (நன்னூல் சூத்திரம் 150 நோக்க). இந்தச் சூத்திரத்தின் கருத்து என்னவென்றால், தமிழ் மொழிக்கு மட்டும் சிறப்பாக ற, ன, ழ, எ, ஒ என்னும் 5 எழுத்துக்களும் அமைந்து கிடக்கின்றன. இந்த ஐந்து எழுத்துக்களுக்கு ஒப்பான அல்லது நிகரான எழுத்துக்கள் வடமொழியில் கிடையா. எனவே, அந்த 5 எழுத்தில் எந்த ஓர் எழுத்து வரினும் வடமொழிப் பயிற்சியினர் அதை எழுத முடியாமல் திணறுவார்கள். உதாரணமாக, ஹிந்தி தேசிய பாஷையாக ஆக வேண்டும் என்று தீர்மானமான வுடனே, அகில இந்திய தபாலாபீஸ் ஒவ்வொன்றின் வாயிற்படியிலும் சிவப்பு இனமல் தகர போர்டுகள் தொங்கவிடப்பட்டன. அந்த போர்டுகளில் ஆங்கிலத்தில், Post & Telegraph office (போஸ்ட் அண்டு டெலிகிராப் ஆபீஸ்) என்று எழுதப்பட்டிருப்பதுடன், அதேதொடர் நாகரிலிபியில் "போஸ்ட் ஏண்டு டேலிகிராப் ஆபீஸ்" என்று எழுதப்பட்டிருப்பதைக் காண்பீர்கள். ஹிந்தி லிபியில் 'டெ' என்று எழுத முடியாது; 'டே' என்றுதான் எழுதமுடியும், ஏனென்றால், நன்னூலார் கூறியது போல் எ, ஒ என்னும் இரு குறிலெழுத்துக்களும் அந்த மொழியாளர்க்குக் கிடையாது.

அதேபோல் ற, ன, ழ என்னும் மூன்றெழுத்துக்களும் தமிழுக்கே உரிய தனி எழுத்துக்கள். அவற்றை நாகரிலிபியில் உண்டு பண்ணவும் முடியாது; உண்டுபண்ணினாலும் படிக்கவும் முடியாது. உதாரணமாக, "கழுதை என்று எழுது!" என்னும் தொடரை நாகரி லிபியில் எழுதவேண்டு மென்று அந்த ஹிந்திப் பித்தர்கள் விரும்பினால் அந்தத் தொடரை அவர்களால் எழுதவே முடியாது.

அப்படியே கஷ்டப்பட்டு மண்டையை உடைத்துக் கொண்டு அத்தொடரை நாகரி லிபியில் எழுதித்தான் தீர்வது என்று அவர்கள் துணிவார்களானால், "கலுதை ஏங்ரு ஏலுது" என்றுதான் எழுதமுடியும். இதைப் படித்தால் நீங்கள் சிரிப்பீர்களா, அல்லது அழுவீர்களா? இதே விதமாகத்தான் "மூன்று" என்பதை "மூந்ரு" என்றும், "தமிழ்" என்பதைத் "தமில்" என்றும், "ஒழிவு" என்பதை "ஓலிவு" என்றும், "கற்றல்" என்பதைக் "கர்ரல்" என்றும், "தெற்கு" என்பதைத் "தேர்க்கு" என்றும், "கொழுநன்" என்பதைக் "கோலுநந்" என்றும், "மொழி" என்பதை "மோலி" என்றும், "ஒற்றன்!" என்பதை "ஓர்ரந்" என்றும் நாகரிலிபியில் எழுத நேரிடும். இப்படித் தமிழைக் கொலை செய்வதற்குத் தகுதியான அணுக் குண்டாகவே விளங்கி வருகிறது, அந்த நாகரி லிபிப் பித்தர்கள் உளறிய உளறல்.

"தமிழ் மொழி" என்னும் முக்கியமான முதற்றொடரையே எழுதக் கொஞ்சமும் லாயிக்கற்ற ஓர் உதவாக்கரை லம்பாடி ஹிந்தி லிபியைக் கொண்டு எல்லாத் தமிழிலக்கியங்களையுமே அந்த நாகரியில்தான் எழுதவேண்டும் என்று கச்சையை வரிந்து கட்டும் சில 'பெரிய மனிதர்'களைப் பார்த்து நாம் மிகவும் மனமுருகி வருந்துகின்றோம். அவர்களுடைய ஹிந்தி பாஷைமீது அவர்களுக்குப் பிடித்த பித்தின் வேகத்தில் அவர்கள் தமிழ்மீதுகூட வெடுக்கென்று வீழ்ந்து கடிக்கிறார்களே என்பதைக் காணுந்தோறும் கேளுந்தோறும் கலக்க மிக வுறுகின்றோம். நம் நாட்டைப் பித்துக்கொள்ளிகள் நிறைந்த தேசமாக அந்தப் 'பெரியார்கள்' ஆக்கிவிடாமல் ஆண்டவனே காப்பாற்றுவானாக என்று குறையிரக்கின்றோம். மீறி அவர்கள் நாகரிலிபி யென்னும் அணுக்குண்டை எறிந்து தமிழெழுத்துக்களைத் துவம்சம் செய்ய யுத்தம் தொடுப்பார்களானால், வீரத் தமிழ் மக்கள் மிகவும் சாத்விகமான முறையில் எதிர்த்து நின்று இறுதி வரை போராடுவர் என்று நம்புகிறோம்.

அழகிய மொழியாகிய தமிழை ஹிந்திலிபியில் எழுத வேண்டு மென்பது சுத்த பைத்தியக்காரத்தன மென்பதைத் தமிழக மக்கள் அங்கங்கே மகா நாடுகள் கூட்டித் தீர்மானங்கள் நிறை வேற்றிச் சென்னை அரசாங்கத்துக்கும் டில்லித் தலைநகர்க்கும் அனுப்பி வைத்து; இந்த விஷமப் பித்தலாட்டத்தை முளையிலேயே கிள்ளி யெறிவார்கள் என்று நாம் ஆவலுடன் எதிர் பார்க்கிறோம். ஹிந்தியால் தமிழுக்கு ஆபத்து என்ற நிலைமை முற்றி, ஹிந்திலிபியால் தமிழ் மொழி புதையுண்டு போகப் போகிறது என்னும் பயங்கர நிலைமை இப்போது எழுந்து விட்டதைத் தமிழகத்தினர் உணர்வார்களாக!

## ராஜாஜீயின் கல்வித்திட்டம்

ராஜாஜீயின் புதுக் கல்வித் திட்டம் சம்பந்தமாகச் சென்னை அசெம்பிளி சபையில் விவாதம் கிளம்பியதும், அவர் அச் சமயத்தில் சாதுரியமாகத் தப்பிக் கொண்டதும் நினைவிருக்கலாம். அவருடைய கல்வித் திட்டத்தைப் பெரும்பாலானோர் எதிர்த்த போது, தாம் ஒரு கமிட்டியை நியமிக்கப் போவதாகவும், அந்தக் கமிட்டியார் கூறும் தீர்ப்பைத் தாம் ஏற்றுக் கொள்வதாகவும் அவர் அப்போது வாக்குறுதியளித்தார். அவ்வாறே அவர் ஒரு கமிட்டியை நியமித்தார். அந்தக் கமிட்டியிலே திரு பருலேக்கர் என்பவர் தலைவராகவும், இன்னும் கல்விக் கலையில் மூழ்கியவராகக் கருதப்படும் மூன்று பேர்கள் அங்கத்தினர்களாகவும் அமர்ந்தனர். அவர்களெல்லாரும் ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோற்றைப் பதம் பார்த்த கதையாகச் சென்னை நகரை யண்மியுள்ள கிராமங்களிலுள்ள ஆரம்பப்பள்ளிகளைச் சென்று பார்வையிட்டு விட்டு, ஒரு நீண்ட அறிக்கையை வெளியிட்டுள்ளார்கள். "அந்த அறிக்கையிலே ராஜாஜீயின் கல்வித்திட்டம் மிகவும் உன்னதமான அபூர்வமான திட்டமென்று அவர்கள் ஒரு முகமாகத் தீர்ப்பு வழங்கி, அவருடைய முன்யோசனைத் தன்மையின் திறமைக்கு நற்சாட்சிகளும் அளித்துள்ளனர். அதுவும் பற்றாதென்று அவர்கள் இன்னமொரு மடி மேலே சென்று, கிராமங்களில் இப் புதிய கல்வித் திட்டம் நுழைக்கப்பட்டது மட்டும் பற்றாதென்றும், எல்லா நகரங்கள், பட்டணங்கள் முதலிய சகல பெரிய ஊர்களிலுங்கூட இத் திட்டம் அமலாக்கப்பட வேண்டுமென்றும் அவர்கள் சிபாரிசு செய்திருக்கிறார்கள். கமிட்டியி லிருந்தவர்கள் படித்த மேதாவிகளாகவும், கல்வித் திட்டங்களை ஆராய்ந்து நடுநிலைமை காணக் கூடியவர்களாகவுமே காணப்பட்டபோதினும், அவர்கள் குறிப்பிட்ட இந்த விஷயத்தில் போதுமான முறையில் கவனஞ் செலுத்தத் தவறிவிட்டார்க ளென்றே நாம் கருதுகிறோம். ஏனென்றால்:—

அந்தக் கமிட்டியினர் நம் தமிழ்நாட்டிலுள்ள பெரும்பாலான ஆரம்பப் பள்ளிகளை நேரில்

(34-ஆம் பக்கம் பார்க்க)



கம்யூனிஸ்ட்க ளெல்லாருமே நாஸ்திகர்கள். கடவுள்மீது நம்பிக்கை வைப்பது தகாது என்றே கம்யூனிஸம் போதிக்கிறது. இக் கட்டுரை அவ் விவகாரத்தை விளக்கிக் காட்டுகிறது.

# கடவுளும் கம்யூனிஸமும்

கம்யூனிஸத்தை உற்பத்தி செய்துவிட்ட கார்ல் மார்க்ஸ் மதங்களைப் பற்றி என்ன விதமான நாஸ்திக வுணர்ச்சியை உண்டுபண்ணி விட்டுச் சென்றாரோ அந்த விபரீத நாஸ்திகத்தையே லெனினும், ஸ்டாலினும் ருஷ்யாவில் பலமாக நிலைநாட்டிச் சென்றார்கள். இன்றுங்கூட அந் நாட்டிலே நாஸ்திகத்துக்குத்தான் செல்வாக்கு உண்டே யொழிய, ஆஸ்திகத்துக்கு அங்கே வேலை யில்லை.

மார்க்ஸ் எழுதிய "Critique of Hegel's Philosophy of Law" (சட்டத்தின் சித்தாந்தத்தைப் பற்றி ஹெகல் கூறியுள்ளது பற்றிய குணதோஷம்) என்னும் நூலிலே கூறுகிறார்:—

"மதம் மனிதனை உற்பத்தி செய்யவில்லை; ஆனால், மனிதனே மதத்தை உற்பத்தி செய்கிறான்... மத மென்பது கீழே போட்டுத் தொகைக்கப்பட்ட ஜீவன் கக்குகிற முணங்கற் பெருமூச்சேயாகும்...அது மக்களின் அபினாக விளங்குகிறது. மக்களின் நிரந்தர சுபிக்ஷத்துக்குப் பிரத்தியக்ஷபூர்வமான எடுத்துக் காட்டுத் தேவைப்பட்டால், மதத்தை அடியோடு ஒழிப்பது ஒன்றுமட்டுமே அவர்களுக்கு நிஜமான பேரின்பத்தை ஊட்ட முடியும்."

லெனின் 1905-ஆம் ஆண்டில் எழுதி வெளியிட்ட "ஸோஷலிஸமும் மதமும்" என்னும் புஸ்தகத்தில் கூறுகிறார்: "(ஏனென்றால்) மத மென்பது மக்களின் அபினாக இருந்து வருகிறது. மதம் ஓர் ஆத்மிக சாராயமாக விளங்கி வருகின்றமையால், முதலாளித்துவத்துக்கு இரையாகிக் கிடக்கும் அடிமைகள் அந்தச் சாராயத்துக்குள்ளே தங்கள் மனித உருவத்தையும், ஒழுங்கான மனித வாழ்வு வாழவேண்டு மென்னும் உரிமைகளையும் மூழ்கடித்து விடுகிறார்கள்."

"லெனினிஸம்" என்ற புஸ்தகத்தில் ஸ்டாலின் இப்படிக் கூறுகிறார்:- "மத விஷயத்திலே நமது கட்சி நடுநிலைமை வகிக்க முடியாது; எனவேதான், ஒவ்வொரு மதமும் உண்டு பண்ணிவிட் டிருக்கும் எல்லாத் தப்பபிப்பிராயங்களுக்கும் எதிராக மத எதிர்ப்புப் பிரசாரத்தை அது தொடர்ந்து நடத்தி வருகிறது..."

இவை யெல்லாம் பழங்காலத்துக் கதைகளென்று நினைத்துவிடாதீர்கள். கம்யூனிஸ்ட்கள் ஆட்சி செலுத்துகிற எந்த நாட்டிலும் இன்றைக்கும் அதே கதிதான் நிலவுகிறது. குறிப்பாகச் சொல்ல வேண்டு மென்றால், இந்த விஷயத்தைக் கவனியுங்கள்:- போலந்து அரசாங்கம் அந் நாட்டிலுள்ள பத்திரிகைகளுக்கு விட்டிருக்கும் அறிக்கை யொன்றில், "கடவுள் (God)" என்னும் பதத்தையே எவரும் எங்கும் பத்திரிகைகளில் பிரயோகிக்கவே கூடாது என்றோர் அடக்கு முறையைப் பிரயோகித் திருக்கிறது. ஆனால், அவசியத்தினிமித்தமாகவாவது கடவுளின் பெயர் எந்தச் செய்தியி லாவது வந்துதான் தீரவேண்டியிருக்கிறது என்னும் நிலைமை ஏற்பட்டால், அப்போது அதை உபயோகிக்கலாம். ஆனால், "God" என்று தலைப்பில் பெரிய எழுத்துப் போட்டு எழுதாமல் "god" என்று சிறிய எழுத்துடன் எழுதவேண்டு மென்று அந்தப் போலந்து அரசாங்கம் பிறகு திருத்தம் வெளியிட் டிருக்கிறதாம்.

ருஷ்யப் புரட்சி நடப்பதற்கு முன்னே லெனின் வெளியிட்ட ஒரு நூலிலே, "மத மென்பது அவனவனுக்கும் உரிய தனிப்பட்ட பிரத்தியேக வியவகாரமாகும்......நாட்டின் ஆட்சி முறை சம்பந்தப்பட்ட மட்டிலே மதத்தை அவ்வாறே தனிப்பட்டவரின் தனி விவகாரமென்று ஒதுக்கித்தள்ளிவிடவேண்டு மென்றே நாம் கோரிக்கொள்கிறோம். ஆனால், நம்முடைய கட்சி சம்பந்தப்பட்ட மட்டில், மதம் தனிப்பட்டவரின் தனி விவகாரமென்று ஏற்றுக்கொள்ள நாம் சித்தமாயில்லை," என்று எழுதினர். எனவே, 1917 அக்டோபரிலே அந்த போல்ஷிவிக்குகள் அதிகாரத்துக்கு வந்தவுடன் தங்கள் கொள்கைகளைச் செயல் முறையில் அமல் நடத்திக் காண்பிக்கத்

தொடங்கிவிட்டனர். 1918 ஜனவரியிலே அவர்கள் பிறப்பித்த சட்டத்தில், எல்லா மாதாகோவில்களுக்கும் சொந்தமான சகல சொத்துக்களும் யாதொருவிதமான நஷ்டஈட்டுப் பரிகாரமுமின்றி அரசாங்கத்தால் பறிமுதல் செய்யப்பட்டுவிடுமென்றும், இனி மேல் எந்த ஒரு மாதாகோவிலும் புதுச் சொத்துக்களை வாங்குவது கூடாதென்றும், பள்ளிக்கூடங்களில் மதக் கல்வி போதிக்கப்படுவது தகாதென்றும் தடுத்துவிட்டார்கள். அதே விதமாக, 1918-இல் அமைந்த அரசியல் சட்டத்தின் 65-ஆவது விதியிலே பாதிரிமார்களுக்கும், மாதாகோவில் குருக்களுக்கும் ஓட்டுரிமை கிடையாதென்றும், ரேஷன் கார்டுகள் அவர்களுக்குக் கொடுக்கப்படமாட்டாவென்றும், அப்படிக் கொடுத்தாலும் ஆக அடி மட்டமான கீழ்த்தர வகுப்பினர்க்கு வழங்கப்படும் கார்டுகளே கொடுக்கப்படுமென்றும், அவர்கள் வர்த்தக சங்கங்களில் சேர அனுமதி கிடையாதென்றும், எனவே, அரசாங்க இலாகாக்களில் அவர்களுக்கு உத்தியோகங்கள் வழங்கப்படமாட்டாவென்றும், கூடுதலான வாடகைகளையும் வரிகளையுமே அவர்கள் செலுத்தவேண்டுமென்றும், அவர்களுடைய குழந்தைகள் நடுத்தரப் பள்ளிகளிலும், பல்கலைக் கழகங்களிலும் கல்வி கற்பிக்கப்படமாட்டார்களென்றும் எழுதிவைத்துக்கொண் டிருக்கிறார்கள். இவை போன்ற இன்னம் பலப்பல சட்டங்கள் மூலமாகவும் மதத் தலைவர்கள், மதக் கல்விப் பீடங்கள், மத ஆலயங்கள் முதலியவெல்லாவற்றையும் நசுக்கி அழுத்தி ஒடுக்கி வைத்துவிட்டார்கள்.

மறைமுகமாக மத முன்னேற்றத்துக்கு முட்டுக்கட்டை போட்டதுடனே, 1922 முதல் நேரடியாகவும் கம்யூனிஸ்ட்கள் கிறிஸ்து மத எதிர்ப்புப் போரைத் தொடங்கிவிட்டார்கள். அவர்கள் "நாஸ்திகன்" என்ற பெயருடன் ஒரு நூல் பிரசுராலயத்தை நிர்மாணித்துக் கொண்டு, மத எதிர்ப்புக் கலாசாலை என்னும் ஒரு கல்விச் சங்கத்தை மாஸ்கோவில் ஆரம்பித்துவைத்து, கிறிஸ்துமஸ் பண்டிகைக்கு எதிர்ப்பாக ஒரு தமாஷாக் கொண்டாட்டம் கொண்டாட ஆரம்பித்தனர்.

1924 பிப்ரவரியிலே "போராடும் நாஸ்திகர் சங்கம்" என்னும் ஓர் இயக்கத்தை அவர்கள் ஸ்தாபித்தார்கள். அந்தச் சங்கத்தின் குறிக்கோள்கள் என்னவென்றால், உழைப்பாளிகளின் ஜன்ம விரோதியே மதம் என்பதை நிரூபித்துக் காண்பிப்பது, இப்பிரபஞ்சத்திலுள்ள சகலமுமே இயற்கை விஞ்ஞானத்துக்கு ஐக்கியப்பட்டவை யென்பதை விளக்கிக்காட்டுவது, மதத்திலே நம்பிக்கை வைப்பது எப்படித் தேசத்துரோகக் குற்றமாக விளங்குகிறதென்பதை எடுத்துக்காட்டுவது முதலியனவாம்.

1929-இலே ஓர் இயக்கம் எழுந்தது. அந்த இயக்கத்தின் குறிக்கோள் ஆயிரக்கணக்கான மாதாகோவில்களைப் பலவந்தமாக மூடுவதற்கு ஆரம்பித்தது. மாதாகோவிற் கட்டிடங்களெல்லாம் ஒன்று தகர்க்கப்பட்டன; அல்லது தானியக் களஞ்சியங்களாக, பள்ளிக்கூடங்களாக, சினிமாக் கொட்டகைகளாக, அல்லது குதிரை லாயங்களாக மாற்றப்பட்டுவிட்டன. இந்தக் காரியங்களுக்கு அனுகூலமாக முதன் முதலில் கோவில் பாதிரிமார்கள் தாக்கப்பட்டார்கள். நூற்றுக்கணக்கான குருக்கள் கைது செய்யப்பட்டார்கள், நாடு கடத்தப்பட்டார்கள், அல்லது தூக்கிலிடப்பட்டார்கள். அன்றியும், அதே ஆண்டில் நிறைவேற்றப்பட்ட சட்டமொன்றில் 18-ஆவது விதி இப்படிக் கூறுகிறது:—

"இந்த நாட்டிலே உள்ள எந்தச் சமூகதார, பிரத்தியேகக் கல்விக் கூடங்களிலுமே எந்தவிதமான மதநம்பிக்கை போதிப்பதும் தகாதென்று தடை செய்யப்பட்டு விட்டது."

ருஷ்யா தேசத்தின் பிரதானமான பிராபல்ய மதம் வைதிக கிறிஸ்தவ மதமே யாகையால்; அந்த வைதிக மத தேவாலயங்கள் மட்டுமே இப்படிப்பட்ட மத எதிர்ப்புத் தாக்குதல்களுக்கு இலக்காயினவென்று எண்ணிவிடாதீர்கள்; மற்றெல்லா மதங்களுமே இப்படிப்பட்ட கதியையே பெற்றுக்கொண்டன. யூதர்களுடைய அநேக பிரார்த்தனாலயங்களும், வேத போதக ஸ்தலங்களும், பள்ளிகளும் மூடப்பட்டுவிட்டன. யூத மதத்தையோ; இப்ரானீ பாஷையையோ எவராவது பிறருக்குப் போதித்தால், அவருக்குச் சிறைத் தண்டனை விதிக்கப்படும். ஸோவியத் மத்திய ஆசியாவிலுள்ள ஆயிரக் கணக்கான மஸ்ஜிதுகளும் மத்ரஸாக்களும் இடித்துத் தரைமட்ட மாக்கப்பட்டன, அல்லது மதானுஷ்டான மில்லாத காரியங்களுக்கான பொது ஸ்தாபனங்களாக மாற்றப்பட்டு விட்டன. முஸ்லிம்களுக்குப் பவித்திரமான ஷரீஅத் சட்டங்கள் அழிக்கப்பட்டன. ருஷ்யாவிலுள்ள எல்லாப் பிரிவுகளுக்கும் சொந்தமான



சகல மாதாகோவில்களும் இவ்வாறே தாக்குண்டன.

சுமார் ஒரு தலைமுறைக் காலம் வரையில் இந்த நிக்ரஹ இயக்கம் தொடர்ந்து பணியாற்றி வந்தது. பிறகு 1937-ஆம் ஆண்டின் மத்தியிலே அவ்வியக்கம் மேலும் மூர்க்கமுற்று, 1100 வைதிக கிறிஸ்தவ மாதா கோவில்களையும், 240 கத்தோலிக்க தேவாலயங்களையும், 61 புராட்டஸ்டண்ட் ஆராதனை ஸ்தலங்களையும், 110 மஸ்ஜிதுகளையும் மூடிவிட்டது.

## யுத்த காலத்தில் மந்தம்

1939 ஜனவரி பிறந்ததும், ருஷ்ய உள்நாட்டு மந்திரியாகிய எழோவ் என்பவர் பதவியைவிட்டு நீக்கப்பட்டார். அதே சமயத்தில் மத எதிர்ப்புப் போராட்டமும் சட்டென்று நின்றுவிட்டது. அப்போது ஒரு ருஷ்ய பத்திரிகை தன் தலையங்கத்தில், "மதமென்பது புரட்சிகரமானதாய்க் காணப்படுகிற ஒரே காரணத்தால், மதம் சம்பந்தமான எந்த விஷயமுமே புரட்சி விளக்கும் சாதனந்தான் என்று எண்ணுவது கூடாது," என்று வரைந்தது.

மதத்தை எதிர்த்துக் கிளப்பப்பட்ட போராட்டம் திடீரென்று இப்படி நின்றுபோய்விட்டதற்குக் காரணம், மதங்களை வேரறுத்து விடுவதென்று கங்கணங் கட்டிய ஸோவியத் ஆட்சி அந்தத் துறையில் பெற்றுக்கொண்ட தோல்வியே யாகுமென்று கருதப்பட்டது. 1937-ஆம் ஆண்டிலே "போராடும் நாஸ்திகர் இயக்கம்" என்னும் ஸ்தாபனத்தின் தலைவர், சென்ற 20 ஆண்டுகளாக அவர்களுடைய இயக்கம் மத எதிர்ப்புப் பிரசாரத்தைத் தீவிரமாக நடத்தி வந்திருந்துங்கூடக் குறைந்த பக்ஷம் நகரங்களில் வாழ்பவர்களுள் மூன்றிலொரு பங்கினரும், கிராமங்களில் வசிப்பவர்களுள் மூன்றில் இரு பங்கினரும் இன்னமும் மத பக்திக்கு இரையாகியே தான் கிடக்கின்றன ரென்பதை அவமானத்துடனே ஒத்துக்கொள்ள நேர்ந்தது.

இவையெல்லா மல்லாமல், ஜெர்மானியுடன் யுத்தம் நடத்தவேண்டிய நிர்ப்பந்தம் நெருங்குகிற தென்பதை ஸோவியத் அரசாங்கம் முற்கூட்டியே உணர்ந்துகொண்டு விட்டமையால், அப்படிப்பட்ட யுத்தம் மூள்வதாயிருப்பின் ஸோவியத் மக்கள் சகலருடைய ஆதரவையும் பெற்றுத் தீரவேண்டுமே என்னும் காரணத்தால் இப்படிக் கொள்கையை மாற்றிக்கொண் டிருக்கலாமோ என்றே எண்ண வேண்டி யிருக்கிறது. 1941 ஜூன் மாதத்தில் ஜெர்மானி ருஷ்யாவுடன் மோதிக் கொண்டது. அடுத்த மூன்றாவது மாதத்தில் (செப்டம்பரில்) ஸோவியத் அரசாங்கம் எல்லாவிதமான மத எதிர்ப்புப் பிரசாரங்களையும் அடியோடு நிறுத்திக்கொண்டு விட்டது. மேலும், அதே சமயத்தில் ஸோவியத் பத்திரிகைகள், மாதாகோவில்கள், மஸ்ஜிதுகள், தேவாலயங்கள், மத குருமார்கள் ஆகிய எல்லார்க்கும் மிகவும் சாதகமான செய்தி யறிக்கைகளையே பிரசுரித்து வந்தன.

## மீண்டும் தாக்குதல்

யுத்தமும் ஒருவாறு 1945-ஆம் ஆண்டில் முடிந்தது. கம்யூனிஸ்ட் கட்சியின் மத்தியக் கமிட்டி தன் பழைய சொரூபத்தைக் காட்டத் தொடங்கி, எல்லா மக்களுக்கும் விஞ்ஞான பூர்வமான இயற்கைக் கல்வியையே போதிக்க வேண்டுமென்றும், மத நம்பிக்கையுடன் கூடிய மூடக் கொள்கைகளைக் களைந்தெறிய வேண்டுமென்றும் முரசு கொட்டி விட்டது. 1947 ஜூன் மாதத்தில் ஒரு கம்யூனிஸ்ட் பத்திரிகை இப்படி எழுதியது: "எனவே, வாலிபக் கம்யூனிஸ்டுகள் தெளிந்த சிந்தையுள்ள அப்பட்டமான நாஸ்திகர்களாகவே விளங்கியும், எல்லாவிதமான மூட நம்பிக்கைகளையும் உதறித் தள்ளுபவர்களாகத் திகழ்ந்தும் வரவேண்டியவர்களா யிருப்பதுடன், மற்ற வாலிபர்களி னிடையிலே தோன்றக் கூடிய சகல விதமான மூடநம்பிக்கைகளையும் தப்பபிப்பிராயங்களையும் வேருடன் கல்லியெறியத் தக்க ஆற்றல் படைத்தவர்களாகவும் இருத்தல் வேண்டும்."

18—10—1947 "பிராவ்தா" பத்திரிகை "ஒரு வாலிபன் மதக் கோட்பாடுகளிலிருந்து சம்பூரணமாக விடுபட்டிருந்தாலொழிய அவனொரு சரியான வாலிபக் கம்யூனிஸ்டாக இருப்பது முடியாது," என்று எழுதியிருக்கிறது.

"கிரெம்லின் (கம்யூனிஸத் தலைமைக் காரியாலயக் கோட்டை) எந்த ஒரு வாலிபக் கம்யூனிஸ்ட்மீது சார்ந்து நிற்கிறதோ, அந்த வாலிபன், கடவுள்மீது நம்பிக்கை வைப்பானாயின், அவன் தேசிய இயக்கக் குறிக்கோள்களை அடைவதற்கு ஆற்ற வேண்டிய தொண்டூழியம் என்னும் 'கடமை'யில் தவறியவனாய் விடுகிறான்......ஒரு கம்யூனிஸ்ட் கடவுள்மீது நம்பிக்கை வைத்து ஆலயத்துக்குச் செல்ல முற்படுவானேயானால் அவன் தன் கடமைகளை நிறைவேற்றத் தவறியவனாய்

விடுகிறான். இதற்கு அர்த்தமென்னவென்றால் அவன் மதாசார மூடப் பழக்க வழக்கக் கோட்பாடுகளை விட்டு இன்னும் தறிபட வில்லை யென்பதும், அவன் பூரண மனச்சாட்சி சுதந்தரம் அடையவில்லை யென்பதுமே யாகும்." (மலோடோய் போல்ஷ்விக், செ. 5-6, 1946).

பத்திரிகையுலகில் இம்மாதிரியான புதுத் தாக்குதல்கள் விளைந்ததை யொட்டி, 1947-இல் "தேசிய, விஞ்ஞான கலா ஞானங்களை ஊட்டுவிக்கும் அகில யூனியன் சங்கம்" என்னும் ஸ்தாபன மொன்று ருஷ்யாவிலே நிறுவப்பட்டது. அந்தச் சங்கத்தின் நோக்கங்களும் செயல்களும் என்ன என்பதை அக் கட்சி உபத்தலைவ ரொருவர் இப்படித் தெரிவித்தார்:—

"நாஸ்திகத்தை வன்மையாகப் பிரசாரம் புரிவதுமட்டுமே இந்தச் சங்கத்தின் உறுப்பினர்களான சகல அங்கத்தினர்களுக்கும் முக்கியமான கடமையாகும். அப்படிப்பட்ட நாஸ்திகப் பிரசாரத்தை ஒழுங்கு முறைப்படியும், கொஞ்சமும் தயை தாட்சிண்ய மின்றியும், விரிவான பரந்த அளவிலும் நடத்தி வைக்க வேண்டும்.

யுத்தத்துக்குப் பிறகு ருஷ்யாவிலே இப்படிப்பட்ட நாஸ்திக இயக்கங்கள் வலுவடைய வலுவடைய, ஐரோப்பாவிலுள்ள நாடுகளில் எவை எவை கம்யூனிஸ ஆதிக்கத்தின் கீழே சென்றுவிட்டனவோ, அந்தக் குட்டி நாடுகளெல்லாம் அதேபோன்ற நடவடிக்கைகளை யெடுக்க ஆரம்பித்தன. அப்படிப்பட்ட குட்டி கம்யூனிஸ நாடுகளுள் நான்கில் ரோமன் கத்தோலிக்க கிறிஸ்து மதமே அதிகமாக வியாபித்திருந்தது. அந்தக் கத்தோலிக்க மதத்தைச் சார்ந்த மதகுருமார்கள் ரோம் நகரிலுள்ள போப்பாண்டவர் சன்னிதானத்துக்குச் செல்லக்கூடா தென்று தடுக்கப்பட்டார்கள். இதனால் அங்குள்ள கத்தோலிக்க மாதாகோவில்கள் தலைமைக் காரியாலயமான போப்பாண்டவரின் ஸ்தாபனத்திலிருந்து துண்டிக்கப்பட்டு விட்டன. அடுத்தாற்போல், அந் நாடுகளிலுள்ள மாதா கோவில்களுக்குச் சொந்தமான ஆஸ்திகளும் நில புலங்களும் அரசாங்கங்களால் பறிமுதல் செய்யப்பட்டன. கோவில் பாதிரிமார்கள் அரசாங்கத்திலிருந்தே சம்பளம் பெற்றுக்கொள்ள வேண்டு மென்றும் முடிவு செய்யப்பட்டுவிட்டது. மதபோதகப் பள்ளிகளும் ஸ்தாபனங்களுங்கூடப் பரிதாபகரமான முடிவையே பெற்றுக் கொண்டன.

### கம்யூனிஸக் கல்வியின் வியாக்யானம்

கல்வி யென்றால் என்ன? என்பதைப் பற்றி ஸோவியத் அரசாங்கம் என்ன கருத்துக் கொண்டிருக்கிறது என்பதற்கு இந்த மேற்கோளே போதுமான சாக்ஷியமாகும்:—

"லெனினிஸ அடிப்படையின்மீது கல்வி போதிப்ப தென்றால், ஒரு வாலிபனின் உள்ளத்துள்ளே, மார்க்ஸ்-லெனின் கொண்டிருந்த கோட்பாடுகளாகிய, சமூக வாழ்க்கை எப்படியிருக்க வேண்டும், ஒரு சமூகத்தில் ஒரு மனிதன் என்ன கடமைகளைச் செய்யத் தோன்றியிருக்கிறான், அவன் அக் கடமைகளை எப்படி நிறைவேற்ற வேண்டும் என்னும் சித்தாந்தங்களை ஆழமாக வேரூன்றி வைப்பது என்று தான் அர்த்தம். இதன் வியாக்யான மென்னவென்றால், உலகாயதத் தத்துவத்தின்மீதும், விஞ்ஞானத்தின்மீதும் அமைக்கப்பட்டுள்ள இந்த உலக வாழ்க்கையே மனிதனின் குறிக்கோள் என்பதை நிலைநிறுத்த வேண்டும்; மூடப் பழக்க வழக்கங்களுக்கும் தெய்விகத் தன்மைக்கும் இரையாகாமல் அவனைத்தடுக்க வேண்டும்; 'வரப்போகிற உலகம்' என்று ஒன்று இருப்பதாகச் சிலர் உள்ளத்துள் வேரூன்றிக் கிடக்கும் வெற்றெண்ணத்தைக் களைய வேண்டும்; இவ்வுலக வாழ்க்கைக்கு மாறுபட்ட, அல்லது அப்பாற்பட்ட கொள்கைகளைச் சிதறவடிக்க வேண்டும்......"

மாதாகோவில் தலைவர்களும், பாதிரிமார்களும் இந்த நாஸ்திக இயக்கங்களுக்கு எதிராகக் கிளர்ச்சி செய்த காரணத்தால் அவர்கள் தேசத் துரோகிக ளென்று குற்றஞ் சாட்டப்பட்டு, அல்லது எதிரிகளின் உளவர்கள் என்று பெயரிட்டு விசாரணை செய்து, ஆயுள் முடியச் சிறைத் தண்டனை விதிக்கப் பெற்றார்கள். கிறிஸ்தவர்கள் மட்டும் அப்படித் தண்டிக்கப்படவில்லை. பல முஸ்லிம்களும் அவ்வரக்கர்களின் தண்டனைகளுக்கு இலக்காகியுள்ளனர்: பாபா ஜில்புவா, பாபா காமிலி, பாபா அலீ தும்ரீ, பாபா முர்த்துஜா குருஜா, பாபா ஷிப்கத் குஷ்தானீ என்னும் ருமேனிய முஸ்லிம் பெரியார்கள் முதலில் சிறையிடப்பட்டு, பின்னர்க் கொலை செய்யப்பட்டே விட்டார்கள்!

கம்யூனிஸ நாட்டிலே கடவுளுக்கோ, மதத்துக்கோ, தேவ வழிபாட்டு ஸ்தலங்களுக்கோ, அல்லது நல்ல ஆஸ்திகர்களுக்கோ இனிச் சித்தும் இடமே இல்லை யென்பதற்கு இன்னும் என்ன அத்தாக்ஷிகள் வேண்டுமோ?



# கதையன்று, கருத்தை யுணருங்கள்!

நான் திண்ணைப் பள்ளிச் சிறுனாயிருந்து வந்த கல்லா இளமைப் பருவத்தே என்னூருக்கு ஓர் "ஆலிம்சா" விஜயஞ் செய்தார். அவர், "எகனை மொகனை"யுடன் கூடிக் "கட்டு முட்டாய்க்" கதை சொல்வதில் கெட்டிக்காரர்; சிற்சில விஷயங்களை அவர் கேட்போ ருள்ளம் கனிந்துருகுமாறு கவினுறப்பேசி, சபையோர்களை மகிழ்விப்பார்; மனமுருகவும் சிற்சில வேளைகளில் செய்துவிடுவார். அவர் எடுத்துக்கூறும் கதைகள் "கட்டுகதைகளே" யாயினும், அவற்றிலே அழிய கருத்துக்கள் நிரம்பித் ததும்பிக் காணப்படும்.

அத்தன்மைத்தாய அறிவுள்ள ஆலிமை அணுகி, நான் ஓர் ஐய வினா விடுத்தேன்; அவ்வினா இறைவனைக் குறித்ததாயிருந்தது: இறைவன் சரியான நீதிமானாயிருந்தால், அவன் ஏன் அநேக அமயங்களில் நம் பகுத்தறிவுக்கு நேர்மாறுயுள்ள காரியங்களைச் செய்கிறான்? அடியவர் பகுத்தறிவிற்கு மாறான காரியங்களைச் செய்பவன்தான் ஆண்டவனோ?" என்று யான் வியப்புடனே வினவினேன், விஷயம் விளங்காது.

இது செவியேற்று, அவர் சிரித்தார். "ஆண்டவன் செய்கைக்கு அடியவர் சிற்றறிவில் காரணம் புலப்படவில்லையானால், அக்கணமே அவ்வாண்டவன் அக்கிரமஸ்தனாய் விடுகிறானோ? பேஷ்! ஆண்டவன் தன் செய்கைக்கெல்லாம் காரணம் இன்னதின்னதெனத் தன் சிருஷ்டி யினங்களுக்குக் கூறக் கட்டுப்பட்டா இருக்கிறான்? அடியவன் புத்தியில் அநீதிபோல் புலப்படும் செய்கைகட்கு ஆண்டவனிடத்துச் சரியான நியாயக் காரணம் இருக்க இடமில்லையா?" என்றெல்லாம் அந்த ஆலிம் பலபடச் சமாதானம் கூறினார். இறுதியிலே இக் கதையொன்றனையும் அடியிற்காணுமாறு அவர் எடுத்து விளக்கினார்.—

முன்னொரு காலத்தில் ஷத்தாத் என்றொரு பேரரசன்— இல்லை, பேரரக்கன்— இருந்து வந்தான்; அவன் ஆண்டவன்மீது பகைமை பூண்டு அன்னவனுக்கு விரோதமான செய்கைகளையெல்லாம் செய்துவந்தான்; ஆண்டவனது சுவர்க்கம் போன்ற, அதனினும் அழகான சுவர்க்கமொன்றைப் போட்டிக்காகச் சிருஷ்டித்தான்; அதிலே தேனாறும், பாலாறும் மடை திறந்து ஓடச்செய்தான்; பன்னீரோடைகளும், பஞ்சணைப்பீடங்களும், நினைத்தவுடன் பால் கறக்கும் "நெல்லூர்ப்" பசுக்களும், வளைத்தவுடன் வாயுள் வளைய வந்து நுழையும் மாதுளை வாதுமை வாழை பலா மா போன்ற கனிவர்க்கங்களும், எண்ணிய மாத்திரத்தில் எண்ணியாங்கு எடுத்துச் செல்லும் சிறகு முளைத்த புரவிகளும், படுத்திருக்கும் பொழுதே பறந்து பறந்து செல்லும் பல்வகை இரத்தினக் கம்பளங்களும், "பட்டுக்கச் சிட்டுத் திகழ்முலை முத்துக் குச்சுக் கட்டிய குழல் பச்சைப் பொட்டுத் தொட்டணி நுதல் அழகான" கண்ணைக்கவரும் கண்ணிமையாக் கன்னிகா, அப்ஸரஸ்களும், நவரத்ன கசித மாட மாளிகைகளும் கூட கோபுரங்களும், மாணிக்கச் செங்கனிகளுடன் கூடிய பச்சை மரகதச் சோலைகளும் பல்வகைப் பூம்பொழில்களும் அழகிய நடைக்காவனங்களும் நந்தவனங்களும் அச் சுவர்க்கத்துள்ளே பொற்பளிங்கு மாளிகைகளுடனே மலிந்து நிறைந்து காணப்பட்டன: தங்களின் கீழே சலசலத்து ஒலித்தோடும் சுனைநீர்ப் பொய்கைகளும் அவ்வுத்தியான வனத்தில் அங்கங்கே அல்லி மலர்களுடன் அழகியனவாக அமைந்து கிடந்தன "இறக்கை முளைத்த பெண்பரிகள்" அச்சோலை முழுதும் பஞ்சவர்ணக்கிளிகளே போல் பறந்து பறந்து, பார்ப்போரைப் பரவசமுறச் செய்து வந்தன.

இவ்வாறாகவும், இன்னம் எண்ணி முடிக்க இயலாதவாறாகவும் அலங்கரிக்கப்பட்டிருந்த அழகிய சுவர்க்கத்துள் "கிருஹப்பிரவேசம்" செய்ய ஷத்தாத் ஒரு நல்ல நாளும், நன்மையான நேரமும் பார்த்துவைத்துக் கொண்டான், சோதிட நூல் வல்லுநரின் பெருந்துணையைக்கொண்டு. சகல காரியங்களும் ஷத்தாத் மன்னன் சித்தம் போலே நன்கு நிறைவேறி முடிவுற்றன; ஆகவே, அந்த நல்ல நாள் விடிந்தது; கிருஹப் பிரவேசத்துக் குரிய சிறந்த நேரமும் நெருங்கி வந்து கொண்டிருந்தது. அந்தச் சமயத்தில் ஆண்டவன், பிராணிகளின் உயிரைக் கவரும் அமரர் இஸ்ராயீலை நோக்கி, "ஏ இஸ்ராயீல்! அந்தத் திமிர் பிடித்த அரசு ஷத்தாத் தனது சுவர்க்கத்துள் நுழைவான் வேண்டி வலக் காலை வாயிற்படியின் நிலையுள்ளேவைத்து, இடக்கால் வெளியிலிருக்கும்பொழுது அந்த சரியான வேளையிலே அவனுயிரை நீ கவர்ந்து

கைப்பற்றி என்னிடம் கொண்டுவரக் கடவாய்!" என்று கடுமையான கட்டளை யிட்டான்.

இதுகேட்டு, இஸ்ராயீல் இடிந்துபோனர்; காரணம் புலப்படாது கலக்கமுற்று நின்ருர். திகைத்தார். "ஏன் நீ மயங்குகிருய்?" என்று இறைவன் வினவினன்.

இஸ்ராயீல் சிரங்குனிந்து, சற்றே மௌன முற்று நின்ருர்; கண் கலங்கக் கலக்கமுற்றுக் கையைப் பிசைந்து நின்ருர். இறுதியில் சிறிதே சிரந்தூக்கி, இறைவனை அச்சத்துடனே உற்று நோக்கி, இவ்வாறு தழுதழுத்த குரலால் மெல்லச் சொல்லத் துவக்கினர்:

"ஏ கண்ணியமிக்க புண்ணிய இறைவா! இவ்வடியேனுக்கு ஒரு சிறு ஐயம் பிறந்துள்ளது."

"என்ன ஐயம்? என் நியதியிலா ஐயம்? நன்று! நன்று!"

"இல்லை, இல்லை. உன் நியதியில் எனக்கு ஐயமில்லை. ஆனல்,........."

"ஆனலென்ன? என் செய்கையிலா சந்தேகம்?"

"இல்லை.........உன் நியதியிலோ, அல்லது உன் செய்கையிலோ, அடியேனுக்கு ஒரு சிறிதும் சந்தேகமில்லை. எனினும், எனக்கு உன் காரியங்கள் சிலவற்றிற்குரிய உண்மைக் காரணம் விளங்குவதில்லை. குறிப்பாக, அன்றொரு நாள் அநேக வருடங்களுக்கு முன்னே—நடுக்கடலில் கப்பலொன்று காற்றிலகப்பட்டுக் கிறு கிறுவென்று சுழன்று சுழன்று, கலகலத்துப்போய் வெடித்து விரிந்துவிட்டது. அவ்வுடைந்து உருக்குலைந்த மரக்கலத்தினின்று பிரிந்த பலகையொன்று அவ் வலைகடலில் தனித்து மிதக்கலாயிற்று. அவ்வொடுக்கப் பலகையின்மீது ஆருந் துணையில்லாது ஆரணங்கு ஒருத்தி பிரசவிக்குந் தறுவாயிலிருந்தாள். அப்பலகை அக்காற்றுக் கடலில் சுழன்று சுழன்று திரிந்தக்கால், அதன்மீது படுத்துத் தத்தளித்துக் கொண்டிருந்த அந்தக் கதியற்ற கர்ப்பஸ்திரீ பிரசவ வேதனையால் அழுது துடித்து அரற்றி, இறுதியிலே ஆண்மகவொன்றை ஈன்ருள். எவரும் உதவி புரியத் துணையில்லாதிருந்த தனி நிலையிலே அந்த எத்தீம்களாய அனுதைத் தாயும் அவளீன்ற இளஞ் சிசுவும் அந்த நடுக்கடலில் மிதந்து கொண்டிருந்த அந்தப் பரிதாபகரச் சூழ்நிலையிலே, அவ்வாற்றுப் பாலகனைத் தனித்து விட்டு, அவ்வீற்றிளம் பெண்டை அக்கணமே உயிர் வாங்கி வருமாறு, ஏ இறைவா! நீ எனக்கு ஆணையிட்டாய்; யானும் உன் கட்டளைக்கிணங்க, அப்பொழுதுதான் ஜனித்திருந்த அவ்விளஞ் சிசுவை அந்த ஒரு சாண் பலகைமீது, நடுக்கடலில் தனித்துக் கிடத்தி விட்டுத் தாயின் உயிரைக் கவர்ந்து வந்து விட்டேன். நீயோ பரிசுத்தமானவன்! நினது நியதியோ பக்ஷபாதமற்றது!! ஆனலும், அப் பரிதாபகர நிரபராதியின் உயிரை நீ கவரச்சொன்னதன் காரணம் இன்றுகாறும் இவ்வேழை மதியேனுக்குப் புலப்படவில்லையே!

"அதுபோகட்டு மென்ருல் இன்று நீ இந்த ஷத்தாதின் உயிரை, அவன் தன் பெருமிதமிக்க வாழ்க்கையின் உச்சத்திலே ஏறிநின்று, தான் சிருஷ்டித்துள்ள அழகிய சுவர்க்கத்துள் நுழைய ஓரடி யுள்ளேயும் ஓரடி வெளியேயுமாய், அதன் வாயிற்படியைத் தாண்டும் நேரம் பார்த்து அவனது ஆருயிரைக் கவர்ந்து வருமாறு நீ எனக்குக் கட்டளையிடுகின்ருய். நிரபராதி! நிரபராதி!! இதன் இரகசியமும் எனக்கு விளங்கவில்லையே!"

"அன்று அந்த அனுதைச் சிசுவைத் தனித்து விடுத்துத் தாயைப் பிரித்து உயிர் வாங்கியதும், இன்று இந்தப் பேராசன்





ஷத்தாதின் அமோக மகிழ்ச்சிக்குரிய ஆனந்த வாழ்க்கையின் அதியுச்சத்திலே இவனது இன்னுயிரை வாங்கப்போவதும் தவிர்த்து, எனது வேறெந்தச் செய்கையிலும், ஏ இஸ்ராயீல்! உனக்கு ஐயம் பிறந்ததுண்டோ?" என்று இறைவன் வினவினன்.

"ஏ என் இறைவா! உன்னுடைய சகல காரியங்களிலும் இவ்விரண்டையன்றி வேறெதுவிலுமே அடியேனுக்கு ஐயம் விளைந்தது கிடையாது."

"ஆகவே, அவ்விரு (அநீதிபோல் வெளித்தோற்றத்தில் காணப்படும்) காரியங்களுக்குமுரிய அந்தரங்கக் காரணம் விளக்கப்பட்டால் போதுமல்லவா?"

"போதும், போதும், ஐயனே! அவ்வளவே போதும்."

"அப்படியானல், கேளும், இஸ்ராயீல்! இன்று இத்துணைப் பெரிய சர்வாதிகார சக்ராதிபதியாய்ப் பெருகி வளர்ந்துள்ள இந்தப் பேராக்கன் ஷத்தாதேதான் அன்று அவ்வனுதைக் குழந்தையாய்த் தாயை யிழந்து, தனித்தவொரு சிறு பலகைமீது நடுக்கடலில் மிதந்த இளஞ்சிசுவாவான்."

"அப்படியா? ஆண்டவனே! ஆச்சரியம்! ஆச்சரியம்!"

"இஸ்ராயீல்! இதில் ஆச்சரியமோ, அதிசயமோ, என்ன இருக்கிறது? அவ்வாறு ஆரும் ஆதரவற்று, அரைச்சாண் பலகைமீது, காற்றுச் சுற்றிச் சுற்றியடித்த கடுங்கடல் நடுவிலே, ஈன்ற தாயையும் இழந்து நின்ற ஒரிளஞ் சிசுவை என்னல் இத்துணைப் பெரிய மகா சக்ரவர்த்தியாயுயர்த்திவிட இயலு மென்பதையும், எத்துணைப் பெரிய மகா சக்ரவர்த்தியாகிய மண்டலேசுவரனையும் என்னல் அரைக் கணத்தில் தரைமட்டமாக்கி உருக்குலைத்துவிட முடியு மென்பதையும் எண்பித்துக் காண்பிப்பதே இவ்விரு என் செய்கைகளுக்கு முரிய இரகசியக் காரணமாயிருக்கிறது. அறிகிறீரா இப்பொழுது? ஏ இஸ்ராயீல்!"

இது செவியேற்று, இஸ்ராயீல் வாய் பிளந்து, "ஏ இறைவா! நீயே மகா பரிசுத்தன்! நினக்கே சகல புகழும்!" என்று அதிசயித்துக் கூறினர்.

இதுதான் அந்த ஆலிம்சாஹிப் எடுத்துரைத்த விருத்தாந்த சுருக்கமாகும். இதன் கருத்து 'இப்பொழுது நமக்கு நன்கு விளங்கிவிட்டது: இறைவன் செய்யும் ஒரு காரியத்துக்குரியகாரணம் வெளிப்படையாய் நமதுசிற்றறிவுக்கு அக்கணமேபுலப்பட வில்லையாயின் உடனே நாம் ஆண்டவன் அக்கிரமஸ்தன், அநியாயக்காரன், கொடுங்கோலன் என்றெல்லாம் கூறத் துணிவது கூடாதாகும். நம் சிற்றறிவுக்குக் காரணம் விளங்கவில்லையாயின், அப்பொழுது ஆண்டவனிடத்துங் கூடத் தக்க காரணம் இருக்க இடமில்லை யெனத் தீர்மானிப்பது தகாது; தகாது. சமன் செய்து சீர் தூக்கும் கோல்போ லமைந்தொரு பால்கோடாமை ஆண்டாற் கணி எனவே இறைவனுக்குத் தகும்.

இன்னம், ஆண்டவன் தன் செய்கைகட்கெல்லாம் அடியவரனைவர்க்கும் காரணம் கூறக் கட்டுப்பட் டுள்ளானென எண்ணுவது அறிவீனமேயாகும். ஓர் உயர்தர நீதிபதி தானெழுதும் தீர்ப்புக்கெல்லாம் தன் கச்சேரியிலுள்ள எல்லாருக்கும் சமாதான விளக்கம் கூறச் சிறிதும் கட்டுப்பட்டில்லை யென்பது உங்களுக்கெல்லாம் நன்கறியப்பட்டே கிடக்கிறது.

பா. தா.

# அருளில்லார்க்கு அவ்வுலகமில்லை

"அருளிலார்க்கு அவ்வுலகமில்லை, பொருளிலார்க்கு இவ் வுலகமில்லை," என்பது ஒரு பழமொழி. ஆகலான் "பொருள்" (செல்வம்) அவ்வுலகுக்கு—அஃதாவது, வரப்போகின்ற அவ்வான்ம வுலகுக்கு—அவசியப்பட மாட்டாது என்பது தெளிவாகின்றது. அவரவருக்குமுரிய நன்மை தின்மைகளே—புண்ணிய பாவங்களே—அவ்வான்ம வுலகில் அவரவருக்கும் கிடைத்தற்குரிய சம்மானத்தையும் சிக்ஷையையும் அளிக்கவல்ல உரை கற்களாயிருக்கின்றனவேயன்றி, அவ்வான்ம வுலகில் செல்வம் என்பது செல்லாக் காசாகத்தான் போய் முடிந்துவிடுமென்பது சரதம் சரதமேயாம். இவ்வுலக வாழ்க்கைக்கு அத்தியாவசியமாயுள்ள ஐசுவரியத்துக்கு அவ்வுலக வாழ்க்கையில் என்னவேலை இருக்கிறது? இவ்வுலகில் எத்துணைக் கெத்துணை ஒருவன் மாபெருந் தனிகனு யிருக்கிருனே, அன்னவனுக்கு அத்துணைக்கத்துணை அவ்வுலகில் உயர் பதவி கிட்டுமென்றும், இப் பவுதிக வுலகில் ஒருவன் எத்துணைக்கெத்துணை வறுமை மிக்க தரித்திரனு யிருக்கிருனே, அன்னவனுக்கு அவ்வான்மவுலகில் அத்துணைக்கத்துணை இழிய நிலையே கிட்டுமென்றும் எந்தமத வேதமும் இயம்பவில்லை; எத்தகைய பகுத்தறிவு படைத்தவனுங்கூட அவ்வாறு அறையத் துணியான்.

"பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்" பொருள் என்றே குந்த குந்ததேவர் குறள் கூறுகிறது; அஃதாவது, "ஒரு சிறந்த மனிதனுக" மதிக்கப்படத் தகாத இழிஞரையெல்லாம் சிறந்த பெரிய மனிதர்களாய்ச் செய்துயர்த்தவல்லது இத்தரணியில் செல்வமாகவே சோபித்து வருகிறது என்பதுதாஞகும். சம்பாதிக்க வேண்டிய ஒழுங்கான முறை தெரிந்து, 'கள்ளமார்க்கெட்' போன்ற தீயவழிகளாலன்றி மெத்த உத்தம நல்ல வழியால் சேகரிக்கப்படும் செல்வமுங்கூட அறத்தையும் இன்பத்தையுமே தருமென்றுதான் அக்குறளாசிரியர் கூறிச் சென்றுளாரல்லது, அந்த நல்ல செல்வத்தால் சுவர்க்கம் சித்தித்தல் கூடுமெனக் குறித்துச் சொல்லவில்லை. "தர்மார்த்த காமமோக்ஷம்" என்று கூறப்பெறும் நால்வகைப் "புருஷார்த்தங்க"ளுள்ளே அர்த்தம்—செல்வம்—என்பது, உத்தமமான உபாயத்தால் சேகரிக்கப் பட்ட போதும், தர்மத்தையும் காமத்தையுமே நல்கவல்லதாயிருக்கிறதன்றி, அது மோக்ஷத்துக்குள் எவரையும் ஈர்த்துச் சேர்க்க மாட்டாதென் றறிக.

"அறனீனும் இன்பமும் ஈனும் திறனறிந்து, தீதின்றி வந்த பொருள்," என்பது அந்த ஜைன முனிவர் கூறிய குறளாயிருக்கிறது. எனினும், இச் செல்வத்தை அடியுடன் வெறுத்தொதுக்கினுல்தான் மோக்ஷ சாம்ராஜயமென்பது சித்திக்குமென்று ஏனைச் சமயங்கள் சில இயம்புவதேபோல் இஸ்லாம் மார்க்கம் எடுத்துக் கூறவில்லை. ஒருநாள் ஒரு பெருந்தனிகன் இயேசுவை யணமித் தன்னை அன்னவர் தம்முடைய சிஷ்யனுய்ச் செய்துகொள்ள வேண்டுமென வேண்டினன். இதற்கவர் இவ்வாறு விடையளித்தார்: "நீ என் சீடனுயிருக்க விழைந்தால், இக்கணமே சென்று நீ உன் ஆஸ்தியனைத்தையும் தர்ம வழியில் செலவு செய்துவிட்டு, வறியனுயிருந்து என்னுடன்கூட வா. ஊசிக் கண் வழியே ஒட்டகம் நுழைந்தாலும் நுழைந்து செல்லும்; ஆயின், பணக்காரன் எவனும் என்றுமே சுவர்க்கம் புகவேமாட்டான்." இனியொரு சமயம் அந்த ஏசுவே "நாளைக்கென நீங்களொன்றையும் சேமித்து வைக்க வேண்டாம்; ஆகாயத்தில் பறந்து திரியும் பக்ஷிஜாலங்களைப் பாருங்கள்," என்று கூறினர்.

மனைவி மக்களையும், மற்றுமுள்ள சொத்து சுதந்தரங்களையு மெல்லாம் அடியுடன் துறந்துவிட்டு, கங்கைக் கரைக்குச்சென்று, மூக்கைப் பிடித்து முணுமுணுத்தால்தான் முக்தி சித்திக்குமென இந்திய நாட்டு ஞானிகள் கூறுநிற்பர். இவ்வாறெல்லாம் இஸ்லாம் செல்வத்தை வெறுத்து நாம் சன்னியாசிகளாய் மாறிவிட வேண்டுமென்று வற்புறுத்துவது கிடையாது. "இஸ்லாத்தில் சன்னியாசமில்லை," என்பது இறைவன் திருமறை. மீக்கூறியதற்கு மாருக, இஸ்லாம் எல்லா ஹலாலான முறையாலும் செல்வம் சேகரிக்க இடமளித்துள்ளது; எனினும், இம்மார்க்கம், மக்கள் செல்வம் சேகரிப்பதொன்றேதான். இத்தரணியில் செய்யத்தக்க முக்கிய காரியமென்று எங்குமே இயம்பியிருக்க வில்லை. எனவே, மானிடன் திரைகடலோடியும் திரவியம் திரட்டுவதற்கென்றே இப்பூவுலகுக்கு அனுப்பப்பட் டில்லை யென்பது தெளிவு. "நான் ஜின்களையும் மனிதர்களையும் என்னை வணங்குதற்கே யல்லது (வேறு காரியத்துக்காகப்) படைத்திருக்கவில்லை," என்று இறைவனே தன் திருமறையில் வற்புறுத்தி யுள்ளான்.



ஆண்டவன் அடியவர்களை இங்கு வீணே சிருஷ்டிக்கவில்லை யாதலால், இவர்கள் அவனை வணங்கி வழிபட்டு, ஆத்ம சுகிர்தம் பெற்று, அவனது பிரீதிக்கு ஆளாய், அவ் வேகவல்லவனது லி(க்)காவை—(தரிசனத்தை)ப்பெற்று உஜ்ஜீவிப்படைவதே அவர்களது பிறவி நோக்கமா யிருந்து வருகிறது. எனவே, இத்தரணியில் மீக்கூறிய ஈடேற்றத்தை யடையத் தேவையாயுள்ள அத்துணையளவுக்குப் போதிய பொருளே எம் முஸ்லிம்களுக்குப் போதுமா யிருக்கிறது. சுவரை வைத்துக் கொண்டுதானே சித்திரம் வரைய வேண்டும்?

தரணிவாழ்க்கையை வெறுத்து, சன்னியாசத்தை மேற்கொண்டு, மேனியை வருத்தித்தான் ஆன்மஈடேற்றம் பெறவேண்டுமென இஸ்லாம் போதிக்கவில்லை. இதற்குமாருக, எம் முஸ்லிம்கள் கோடீசுவரர்களா யுயர்தற்கு வேண்டிய துறையிலே பொருளீட்டுவதொன்றையே பெரு நோக்காய்க்கொண்டு இக்குவலயத்தில் உயிர் வாழ்ந்துவர வேண்டுமென்பது இஸ்லாத்தின் இனிய போதனை யன்று. துறவறத்திற்கும், கோடீசுவரரா யுயரும் மார்வாடி மனப்பான்மைக்கும் இடை நடுவே "சிராத்துல் முஸ்தக்(க்)கீ" மில் நிலை நிற்கவேண்டு மென்பதே இஸ்லாத்தின் இனிய போதனையா யிருக்கிறது. ஆனல், மனிதன் ஆரம்பத்தில் தனது சுகவாழ்வுக்குரிய அவசியமான அளவுக்கே பொருள் தேட முற்படுகிருன்; ஆயின், நாளடைவில் செல்வம் சேரச்சேர, அச் செல்வத்தைத் திரட்டிக் குவிப்பதே தனக்குரிய சுக வாழ்க்கை யெனக் கருதத் தலைப்பட்டும், உடற் சுகத்தையும் உயிர்ச் சுகத்தையும் மறந்து, அந்தச் செல்வத்தைத் திரட்டிக் குவிப்பதொன்றையே தன் ஜென்ம நோக்கமெனக் கொண்டு, அல்லும் பகலும் அதே வேலையாயலைந்து திரியத் தலைப்பட்டு விடுகிருன். இது, குளிர்காயச் செத்தை யரிக்கச் சென்றவன் குளிர்காய்வதை அடியுடன் மறந்து கூளம் சேகரிப்பதிலே நாட்டடத்தியவனதையாகத்தான் காணக் கிடக்கிறது.

எனவே, எம் முஸ்லிம்கள், "(இறைவனே!) உன்னையே நாங்கள் வணங்குகிறோம். இன்னம், உன்னையே நாங்கள் உதவி கோருகிறோம்." என்று பிரார்த்தித்து வணங்குங்கால், "எவர்கள் மீது நீ யுன் அருட்கொடையைச் சொரிந்தனையோ, அவர்கள் நடந்து சென்ற நேரிய பாதையினூடே எங்களையும் நீ நடாத்தி வைக்கக் கடவாய்," என்றே அவ்விறைவன் பால் வேண்டுதல் புரிகிருர்கள். அவ்வாறு ஆண்டவனது அருட்கொடையைப் பெற்றவர்கள் இவ் வுலகில் பெரியதொரு செல்வத்தை அருளப்பெற்ற தனவந்தர்களா யில்லை. கற்பகத்தைச் சார்ந்தும் காஞ்சிரங்காய் வேண்டுவார் போலே *-அம்மகான்கள் இறைவனிடத்து இவ்வுலகப் பொருள்களைக்கேட்கமாட்டார்கள். ஆனல், அவனது அருட்கொடையை அருளப் பெற்றவர்கள், நபிமார்களாகவும் சத்திய சந்தர்களாகவும், மூமினீன்களாகவும், நல்லடியார்களாகவுமே யிருக்கிருர்கள் (குர். 4 : 69).

ஆகையால், அப்படிப்பட்ட சுத்த சாதுக்கள் சென்ற பாதையினூடே நம்மையும் செலுத்தி வைக்குமாறே நாம் ஆண்டவனிடத்து வேண்டுதல் புரிகிறோமன்றி, அந்த பிர்லாக்களும் பஜாஜ்களும் செலுத்தப்பட்ட பாட்டையிலே எங்களையும் செலுத்தி, ஏ இறைவா! எங்களை நீ கோடீசுவரராய்ச் செய்தருளக் கடவாய்," என்று வேண்டிக் கொள்வது அறவே கிடையாது.



* "கற்பகம்" என்பது வேண்டுவார்க்கு வேண்டுவதை யளிக்கவல்ல தேவலோக விருக்ஷமாம்; அதனையண்டி ஒருவன் காஞ்சிரங்காயை—(எட்டிக்காயை) வேண்டுவது எத்துணைப் பெரிய முட்டாட்டனம் பாருங்கள்! ப—ர்.

இவ்வுண்மையை உணரவியலாத ஒரு சில அறிவிலிகள் அவ்லியாக்களின் சமாதியடிகட்குச் சென்று, "எங்களுக்கு நீங்கள் பொன்னைக் கொடுங்கள்; பெண்ணைக் கொடுங்கள்; பிள்ளையைக் கொடுங்கள்; சீக்கைப் போக்குங்கள்," என்றெல்லாம் வேண்டுதல் புரிகிருர்கள். இது முழுமூடத்தனமே யாகும். உண்மை முஸ்லிம்கள் இறைவனையே வணங்கி, நபிமார்களையும், சத்திய சந்தர்களையும், மூமினீன்களையும், நல்லடியார்களையும் இறைவன் நடாத்திச் சென்ற ரஸ்தாவிலே தங்களையும் நடாத்தி வைக்குமாறு, சுகிர்தத்துக்காக உதவி புரியும்படி பிரார்த்தனை புரிந்து வருங்கால், அறிவிலிகள் ஆண்டவன் நேயர்களாய அந்த நல்லடியார்—(அவ்லியாக்)கள் கல்லறைக்குச் சென்று, காஞ்சிரங்காயாய முற்கூறிய பவுதிக வுலகப் பொருள்களைக் கேட்டு இறைஞ்சுகிருர்கள். இவ்வுலக எட்டிக்கொட்டைகட்குரிய "பரக்கத்"தை(?) நாடியே பலப் பல மனிதர்கள், நபிநாயகத்தின் பேராலும், முஹ்யித்தீன் ஆண்டகையின் பேராலும் வேறு சில அவ்லியாக்களின் பேராலும் "மவ்லூது"ம் ஓதுகிருர்கள். இம் மக்களுக்கு வியாபார விருத்தியோ, செல்வப் பெருக்கோ, கிடைத்துவிட்டால், அந்த அபிவிருத்தியெல்லாம் அந்த முற்கூறிய "பரக்கத்"தாலேயே கிடைக்கிறதென நினைக்கிருர்கள். இது சுத்த பைத்தியக்காரத்தனமேயாகும். என்னெனின், நிரீசுவரவாத நாஸ்திகர்களும், உலகாயத மனப்பான்மையுள்ள முரடர்களும், அசல் 'முஷ்ரிக்' களுமெல்லாம் பெரும் பெரும் உத்தியோகஸ்தர்களாகவும், கோடீசுவரர்களாகவும் இந் நாட்டிலும், ஏனை நாடுகளிலும் விளங்கி வருவதை அந்த அவ்லியாபக்தர்கள் காணமாட்டார்களா? இந்திய யூனியன் அரசாங்கப் பிரதமர் ஒரு நிரீசுவரவாதி; இந் நாட்டு ராஷ்ட்ரபதி ஒரு பக்கா முஷ்ரிக். இன்னம் மாகடிய முஷ்ரிக்குகளாய பிர்லா, பஜாஜ், டால்மியா போன்றவர்களெல்லாம் மகாகோடீசுவரர்களா யிலங்குகிருர்கள்.

இறைவனை மறந்து, வெறும் பேராசையால் சேகரிக்கப்படும் பணம் அதனைத் திரட்டும் மனிதனுக்குச் சூடுபோடவே உதவுமெனக் கூறப்பெறுகிறது; * இவ்வாறு நரகத்தில் உடையவருக்குச் சூடுபோடவுதவும் தீய பணத் திரளைக் குவித்துக் கொடுப்பதற்கே நபிமாரின் பரக்கத்தும் நல்லுதவி புரிகிறதென்று நம்பத் துணிவது பெரியதொரு மடமையே யாகும். ஆண்டவன் ஏவியுள்ள வண்ணம் நடந்துவரும் நல்ல முஸ்லிம்கள் செல்வர்களா யுயர்வது வேறு விஷயம். ஆனல், அச் செல்வத்தைக் குவிக்கவே மனிதன் இத் தாணிக்கு அனுப்பட்டுள்ளானென்று கருதுவது தவறேயாகும். ஆதலால், ஆத்மசுகிர்தம் அடையப் பெறுவதே எம் முஸ்லிம்கள் ஆசிக்கக்கூடிய அபிலாஷையா யிருக்கிற தென்பது தெளிவு. ஆகவே, ஆண்டவனை வணங்குகிறவர்கள் தரித்திரர்களே யென்றும், அவ்லியாக்களை வணங்குகிறவர்களெல்லாம் ஐசுவரியவான்களே யென்றும் கூறும் மடயன் எவனும் உண்மை முஸ்லிமாயிருப்பது முடியாதென அறியக் கடவீர்களாக.



"* ......தங்கத்தையும் வெள்ளியையும் குவடாய்க்குவித்து வைத்து, ஆண்டவனுடைய பாதையில் செலவு செய்யாத அவர்களைப்பற்றி யென்றாலோ, அவர்களுக்கு நோயுண்ட வேதனை யுண்டென்று அறிவிக்கக் கடவீர்; அந்த (இறுத்தீர்ப்பு) நாளில் நரகத்து நெருப்பில் அவை (பழுக்கக்) காய்ச்சப்பட்டு, அவர்களுடைய நெற்றிகளும், விலாப்புறங்களும், முதுகின் புறங்களும் அவற்றால் சூடுபோடப்படும்: 'இது நீங்கள் உங்களுக்கென்று சேகரித்துக் கொண்டதா யிருக்கிறது; ஆதலால், நீங்கள் சேகரித்துக் கொண்டதைச் சுவைத்துப் பாருங்கள்,' (என்று இறைவன் கூறுவான்)" (ஸூரா, தௌபா; 9 : 34, 35).






## அத்தியாயம் 34

### "தலாக்!"

எல்லாம் ஆண்டவன் நாடியபடியேதான் நடக்கு மென்னும் சித்தாந்தத்துக் கேற்ப, ஷஜருத்துர்-மூஃஜுத்தீன் வாழ்க்கையில் எதிர் பாராத பெரு நிகழ்ச்சி யொன்று வந்துற வேண்டு மென்று இறைவன் எண்ணி யிருந்தான் போலும்!

மூஃஜுத்தீனிடமிருந்து அதிகாரத்தைப் பற்றிக் கொண்ட ஷஜருத்துர் மிகவும் உன்னதமாகவே எல்லாக் காரியங்களையும் கண்காணித்து வந்தா ரென்றாலும்; ஐபக்கின் முதல்மனைவி மைமூனவின்மீது கொண்டிருந்த துவேஷமும் அசூயையும் உள்ளத்துள் கொழுந்துவிட்டு எரிந்து கொண்டே யிருந்தன. ஷஜருத்துர் மூஃஜை மணந்து கொண்ட நாட்களாக மைமூனவை அந்த சுல்தான் அடியோடே மறந்துபோய், ஷஜருத்துர் மட்டுமே பூலோக சுவர்க்க மென்று முற்றமுற்ற மூழ்கிப்போ யிருந்தும் கூட, அந்த அம்மையாரைத் திருப்தியுறச் செய்யமுடியவில்லை. எனவே, இரவும் பகலும் எந்நேரமும் மைமூனவைப் பற்றிய சிந்தனையே ஷஜரின் கவனத்துக்கு வந்து கொண்டிருந்தது. காதற்பொறாமையால் மட்டும் மைமூனவை ஷஜருத்துர் வெறுக்கவில்லை. ஆனல், அப்படி வெறுத்ததற்கு அரசியல் காரணமும் இருந்து வருகிறது. ஏனென்றால், நாள் செல்லச் செல்ல ஷஜருத்துர்ருக்கும் குழந்தை யொன்றும் பிறக்கவில்லை. மைமூனவுக்கோ, ஏற்கெனவே ஒரு புத்திரன் பிறந்திருந்து, தினமும் வளர்ந்து கொண்டே சென்றான். எனவே மைமூன மூஃஜுத்தீனின் மனைவியாக இருக்க விருக்க, அந்த நூருத்தீன் அலீக்கு அரசாங்கத்தின்மீது உரிமை இருந்தே வரும். ஆதலால், மைமூனவை எப்படியாவது திரஸ்கரித்து ஒதுக்கித் தள்ள வேண்டுமென்பதில் ஷஜருத்துர்ரின் கவனம் சென்று கொண்டே யிருந்தது.

நாம் சென்ற அத்தியாயத்தில் குறிப்பிட்ட அந்தப்புரச் சயனவறைச் சம்பவம் நிகழ்ந்து பல நாட் சென்ற பின்னர் ஒருநா ளிரவில் ஷஜருத்துர்ரும் மூஃஜுத்தீனும் தங்கள் அந்தரங்க சயாகிருகத்தில் சந்தோஷமாகச் சம்பாஷித்துக்கொண் டிருந்தார்கள். மூஃஜுத்தீன் தம்முடைய முதல்மனைவியை மறந்து பல நாட்களாகிவிட்டபடியால், மைமூன உயிருடன் இருப்பதாகக்கூட எண்ணவில்லை. அப்படிப்பட்ட சந்தர்ப்பத்திலேதான் அடியிற் காணும் சம்பவங்கள் நிகழ லாயின:—

"நாதா! தாங்கள் ஏன் இன்று சற்று முகவாட்டத்துடனே காணப்படுகிறீர்கள்? தங்களுக்கென்ன குறைவு ஏற்பட்டு

விட்டது?" என்று ஷஜருத்துர் மிகச் சாதுரியமாக சுல்தான் முஆஜைச் சோதிக்க ஆரம்பித்தார்.

"காதலி ! வேறொன்றுமில்லை நான் உன்னை மணந்து ஆறு ஆண்டுகட்கு மேலோ கியும் நமக்கு ஆண்டவன் ஒரு புத்திர பாக்கியத்தைக் கூடக் கொடுத்தருள வில்லையே என்பதற்காகத்தான் கலக்க முறுகிறேன். என் ஆசை மைந்தன் நூருத்தீன் இப்போது எப்படிப்பட்ட கட்டழகு மிக்க பாலனாகத் திகழ்ந்துகொண் டிருப்பா னென்பதை எண்ணி மிகவும் குழப்ப மடைகிறேன்."

"என்ன! தாங்கள் பட்டமேற்ற சில நாட்களில் ஷாமுக்குப் படையெடுத்துச் சென்று விட்டீர்க ளென்பதையும், திரும்பி வந்த பிறகு சமீப காலம் வரையில் தாங்கள் என்னை மனப்பூர்வமாய் நேசிக்கவில்லை யென்பதையும் மறந்தா போனீர்கள்?...நான் என்ன மலட்டுப் பெண் பிள்ளையா? எனக்கும் ஆண்டவன் முன்னம் புத்திரபாக்கியத்தைத் தந்தருள வில்லையா? எனவே, தவறு எங்கே இருக்கிறதென்று தெரிந்துகொள்ளாமல்...," என்று பேசிக் கொண்டே நாணத்தால் நின்றுவிட்டதைப் போல் சரியாக நடித்துக் காண்பித்தார்.

"என் கண்மணி! தவறு உன்மீ திருக்கிறதென்றோ, அல்லது உன்னை ஒரு மலடியென்றோ நான் சொல்லவா வில்லை. ஆனால், நான் பெற்ற என் பிரியமுள்ள மைந்தனையும், அம் மைந்தனைப் பெற்ற தாயையும் அறவே மறந்து விட்டுச் சும்மா இருப்பதென்றால், அஃதெங்ஙனம் சாலும்? நீயாவது எனக்கு ஒரு குழந்தையைப் பெற்றிருப்பா யாகில், என் மனம் இப்படி யெல்லாம் சஞ்சலப்படாது!......என்ன செய்யலாம்? எல்லாம் என் தலைவிதி!"

"எதைத் தலைவிதி என்கிறீர்கள், நாதா? தற்காலிகமாகச் சில நாட்களுக்கு எனக்குக் கருக்கூடவில்லை யென்றால், அஃதென்ன பெரிய தலைவிதியோ! அப்படி நான் பிள்ளை பெறுமல் போவதற்கு யார் காரணம் தெரியுமா?...ஹூம், அதை நான் சொல்லிப் பிரயோஜனம்?"

"என்ன! நீ பிள்ளை பெறுதபடி உன்னை எந்தப் பாவி தடை செய்கிறுன்? உடனே சொல்!"

"சொல்லிப் பிரயோஜனம் என்ன விளையப் போகிறது? எனக்குத் தெரியும், யார் வைக்கிற சூனியத்தால் என் கருச் சிதைந்து விடுகிறதென்று. எனக்குத் தெரியும் அந்தச் சூனியக்காரர்களை எப்படித் தொலைப்பதென்று. எனினும், இன்னம் சில காலத்துக்கு இப்படியே பிள்ளை பெறுமற் காலத்தைக் கடத்தினல்தா னென்ன? என்று கருதியே நானும் ஒரு நடவடிக்கையையும் எடுக்காமல் பேசாமல் காலங் கழித்து வருகிறேன்...சரி, அது கிடக்கட்டும். இந்த வருஷம் வரவு செலவுத் திட்டத்தில் லக்ஷம் தீனர் மீதிப்படுமென்று நம் நிதி மந்திரி இன்று கூறினரே, அந்தத் தொகையை நாம் மத்ரஸாக்கள் கட்டுவதற்கும், வைத்திய சாலைகள் நிருமிப்பதற்கும் ஏன் செலவிடக் கூடாது?"

"ஷஜருத்துர்! நீ எத்துணைச் சாமார்த்தியமாகப் பேச்சை மாற்றிவிடுகிருய்! அரசாட்சி முழுவதையும் நிர்வகிக்கிற நீ அந்த லக்ஷம் தீனரை எப்படிச் செலவிட்டால் என்ன? பேச வேண்டிய முக்கிய விஷயத்தை விட்டு விட்டு ஏதேதோ பேசுகிருயே! உனக்கு விரோதமாக எவரோ சூனியம் வைக்கிருர்க ளென்கிருய்; அந்தச் சூனியக்காரர்கள் யாரென்பதும் தெரியுமென்கிருய். எல்லாம் தெரிந்த நீ இப்படியெல்லாம் பேசாமலிருப்பது நல்லதா! கருவைச் சிதைப்பது எவ்வளவு பெரிய பாபம்? அதிலும், அரசியின் கருவைக் குலைப்பது எவ்வளவு பெரிய துரோகம்! சூனியக்காரர்கள்மீது நீ நடவடிக்கை எடுக்கப் பயந்தால், அந்தப் பொறுப்பை என்னிடம் விட்டுவிடு. யார் அந்தத் துரோகிகள் என்பதை மட்டும் என்னிடம் சொல்லிவிடு. உடனே கண்ட துண்டமாய் வெட்டி யெறிந்துவிட்டு மறுவேலை பார்க்கிறேன்!" என்று மீசையை முறுக்கினர் முஆஜுத்தீன்.

"அப்படியானல், எனக்குச் சிசு பிறக்கவில்லை யென்பதற்காகவா இவ்வளவு ஆத்திரம் அடைகிறீர்கள்? நீங்கள் ஆத்திரப்பட்டு என்ன பயன்? எல்லாம் அவனுடைய சித்தமல்லவா?–இந்த நாட்டுக்குத் துரோகம் நினைக்கிறவர்களை மட்டுமே நான் பழிவாங்க முன் நிற்பேனன்றி, என் சொந்த நலத்துக்கோ, என் பிள்ளைப் பேற்றுக்கோ ஊறு விளைக்கிறவர்களை நானே அல்லது தாங்களோ, ஏன் தண்டிக்க வேண்டும்? 'சுல்தான ஷஜருத்துர் தன் சுய நலத்துக்காகப் பழிவாங்கிக் கொண்டாள்' என்னும் பழிச் சொல்லுக்கும் அபக்கியாதிக்குமா நான்

ஆளாக வேண்டுமென்று தாங்கள் திட்டமிடுகின்றீர்கள்! முடியாது, முடியாது, முக்காலும் முடியாது! இந்த ஷஜருத்துர் பொது நலனைப் பாதிக்கிற துரோகச் செயல் இழைக்கிறவர்கள் மீது மட்டுமே செம்மையாகப் பழி தீர்த்துக் கொள்வா ளன்றி, தாங்கள் கருதுவதுபோல் இப்படிப்பட்ட அற்பக் காரணங்களான சுயநலத்துக்காக எப்படிப்பட்ட வரையும் பழிவாங்கத் துணியமாட்டாள்.—ஆமாம்! எனக்கு இறுதிவரை புத்திரபாக்கியம் இல்லாமற் போகும்படி எந்தக் கொடிய சூனியக்காரர் என்ன செய்தாலும் சரியே! எனக்காக நான் பழிவாங்க மாட்டேன்!"

"என்ன ! சுல்தானவாகிய உனக்குச் சந்ததியில்லாமற் போகும்படி எதிரிகள் செய்கிற சூழ்ச்சி தேசத்துரோகக் குற்ற மல்லவா? அப்படிப்பட்ட கொடிய துரோகிகள் மீது நீ பழிவாங்கிக் கொள்வது எப்படிச் சுய நலமாகக் கருதப்படும்? எல்லாம் தெரிந்த நீயா இந்தப் பொல்லாத துரோகிகளான சூனியக்காரர்களைச் சும்மா விட்டு வைப்பது? பேஷ்! நன்ரு யிருக்கிறது!"

"நாதா! ஏன் வீணே கோபிக்கிறீர்கள்? எல்லாவற்றையும் நன்ருய்ச் சீர் தூக்கிப் பார்க்காமலா நான் பேசுகிறேன்? ஆண்டவனே அந்தக் கொடியவர்களைத் தண்டிக்கட்டும் என்றுதான் நான் பேசாமலிருக்கிறேன். என்னெனின், ஒரு பிண்டத்தை உற்பத்தி செய்வது ஆண்டவன். அப்படி உற்பத்தி செய்கிற அத்தேவ நியதிக்குப் புறம்பாக எந்த ஆணே எந்தப் பெண்ணே எந்த வகையால் தடை முறையைப் பிரயோகித்துக் கருக்கூடாமற் செய்து விட்ட போதினும், அன்னவர் இயற்கையாகவே இறைவனின் சாபத்துக்குத்தான் இலக்காகித் தீரவேண்டும். இது தெய்வ நியதி. நாமொன்றும் செய்வதற் கில்லை. அந்தப் பாழாய்ப்போன கொடிய சூனியக்காரர்களை இறைவனே இரட்சிப்பாளுக!"

"ஷஜருத்துர்! உன் வேதாந்தங்களும் தத்துவ போதனைகளும் இம்மட்டோடு நிற்கட்டும். என் தாடி பற்றி யெரியும்போது நீ சுருட்டுக்கு நெருப்புக் கேட்கிருய்! நன்ரு யிருக்கிறது லட்சணம்! யாரோ சூனிய வித்தை கற்றவர்கள் உன் கருவைக்கூட வொட்டாமல் தடுத்துக்கொண் டிருக்கிருர்

களாம்! அவர்களை ஆண்டவனே காப்பாற்ற வேண்டுமாம்; வெகு நன்ருயிருக்கிறது! மூஸா நபியின் காலத்துக்குமுன்பிருந்து இன்றுவரை இந்த மிஸ்ர் அந்த நாசமாய்ப் போன கொடிய சூனியத்தால்தானே குட்டிச் சுவராகிக்கொண்டு போகிறது? பிர்அவ்ன் தொலைந்தா னென்ருலும் அவன் விட்டுப் போன சூனியக்காரனும் சூனியக்காரியும் இன்னம் சூனியங்கள் செய்து கொண்டேயிருக்கிருர்களே! ஐயூபிகள் ஆண்டவரையில் அவர்கள்கூட அக்கயவர்களை நசித்தொழிக்க வில்லை யென்ருலும், நாமாவது ஏன் அப்புனித கைங்கரியத்தைச் செய்யக்கூடாது? ஷஜருத்துர்! வீணை பழிக்கு நாம் ஆளாக வேண்டாம். இப்போதே அத் துரோகிகள் யாரென்பதைக் கூறிவிடு. ஒரே நொடியில் தொலைத்துவிடுகிறேன். நீ சொல்லாவிட்டாலும், நான் சல்லடை போட்டுச் சலித்தாவது அந்த நயவஞ்சகர்களைக் கண்டுபிடித்துக் கண்ட துண்டமாக்கிக் கோட்டைக் கதவுகளில் தொங்கவிட்டு விடுகிறேன்!"

ஷஜருத்துர் விஷமச் சிரிப்புச் சிரித்தார். "நாதா! சூனியக்காரர்கள் முன்னல் செங்கோலின் சக்தி எதிர்த்து நிற்க முடியா தென்பதைத் தாங்கள் அறியமாட்டீர்களா! அந்தப் பொல்லாத தந்திரம் கற்றவர்கள் ஜின்களாலும், ஷைத்தான்களாலும் செய்ய முடியாத பயங்கரச் செயல்களை யெல்லாம் செய்யத் துணிந்து விடுவார்களே! இப்போது தாங்களும் நானும் பேசிக் கொண்டிருக்கிற இந்தப் பேச்சை யெல்லாங்கூட அவர்கள் எப்படியோ தெரிந்து கொண்டு விடுவார்கள்! பிறகு வேறு விபரீதம் தேவையே யில்லை! இவ் வுலகிலுள்ள சகலவல்லரசுகளும் ஒன்று சேர்ந்து ஏக காலத்தில் மிஸ்ர்மீது படையெடுத்து வந்து விட்டாலும், நான் கலங்க மாட்டேன்.—ஏன்! லூயீ அப்படித்தானே இங்கே `பாய்ந்து வந்தான்!—ஆனல், ஒரே ஒரு சூனியக்காரனையோ அல்லது சூனியக்காரியையோ நான் கண்டுவிட்டால், காததூரம் ஓடி ஒளிந்து விடுவேன். வேண்டாம்! தாங்கள் தெரியாத்தனமாய் அல்லது விளையாட்டுத் தனமாய்க் காரியத்தைக் கெடுத்துக் கொள்ளாதீர்கள்! வேறு விஷயம் ஏதுமிருப்பின், பேசுங்கள்! எனக்கு அந்தப் பொல்லாதவர்களை நினைக்கவே பயமாயிருக்கிறது!" என்று நிஜமானபாவனையோடு பொய்யாக நடித்துப் பேசினர்.

முஆஜுத்தீனுக்குக் கோபம் அதிகரித்தது. தாடி ரோமங்கள் சிலிர்த்துவிட்டன. "என்ன!

உயிரிழந்த பிரேதத்தைக்கூடத் தைரியமாக உடன் வைத்துக்கொண்டிருந்த நீ இந்த நிழலைக்கண்டு பயப்படுகிறாய்! உனக்குத்தான் தைரியமில்லை யென்றால், என்னிடம் நீ சொல்லிவிட வேண்டியதுதானே? வருவது வரட்டுமென்று நான் நடவடிக்கை யெடுத்துக் கொள்கிறேன். என்ன தைரியசாலியான மலிக்காவாயிருந்தாலும், நீ பெண்ணல்லவா? பெண்கள் பிசாசுக்கும் பில்லி சூனியத்துக்கும் பயப்படுவது சகஜமா யிருக்கிறது. ஆதலினால்தான் நீ இப்படிப் பயப்படுகிறாய்! அதுவும் அனுவசியமாய்ப் பயப்படுகிறாய்!" என்று மெய் பதற மொழிந்து நின்றார்.

"என்னருங் காதலரே! இப்போது என்ன நிகழ்ந்து விட்டது? தாங்களேன் இப்படிப் பிரமாதமாய்க் கோபிக்கவேண்டும்? இயற்கை மரண மென்பது வந்து அந்தச் சூனியக் காரர்கள் இவ்வுலகத்தைவிட்டே தொலைந்து போனால் நல்லதாய் முடிகிறது. ஊர்க் குருவியைக் கொல்வதற்கு இவ்வளவு பெரிய அம்பைத் தொடுப்பானேன்? எனக் கொன்றும் புரியவில்லை. நாதா! விட்டு விடுங்கள், அவ் வெண்ணத்தை. வீணுகத் தாங்கள் அச் சூனியக்காரர்களின் மாயத்தில் சிக்கிவிடப் போகிறீர்கள்! இன்னம் எத்தனை நாட்களுக்குத்தாம் அவர்கள் வித்தை பலிக்கப் போகிறது? பொறுமையாயிருப்போம். இறைவன் ஒருபோதும் சூனியக்காரர்களை நேசிப்ப தில்லை!"

இம்மொழிகள் மூஈஜுத்தினின் கோபத்தைத் தணிப்பதைவிட அதிகமாக மூட்டி விட்டன. "உன் தத்துவார்த்தங்களை நான் செவியேற்கப் போவதில்லை! உனக்கும் எனக்கும் சேர்ந்து கேடு சூழ்கிற அக் கயவர்கள் யார் என்பதை நான் இப்போதே தெரிந்து கொண்டுதா னுகவேண்டும். என் உயிரே போவதானுலும் சரிதான். நான் அந்தச் சூனியக்காரர்களை—ஆணேயாயினும், பெண்ணேயாயினும்—இன்று பொழுது புலருமுன்னே தொலைத்துத்தான் தீரவேண்டும்! இந்த விஷயத்தில் நீ எனக்கொன்றும் விபரீத புத்தி போதிக்கத் தேவையில்லை. நான் இப்போதே அந்தப் பகைவர்கள் யாரென்பதைத் தெரிந்துகொண்டே ஆக வேண்டும்!" என்று துடி துடித்தார் சுல்தான்.

"இந்தத் தர்மசங்கடத்துக்கு என்ன செய்வேன்? நாதா! தயவு செய்து என் பொருட்டாகவாவது இந்த எண்ணத்தை மறந்து விடுங்கள். அந்தச் சூனியக்காரர்கள் யாரென்பதை நான் சொல்லி யொன்றும் பயன் விளையப்போவ தில்லையே! தங்களால் செய்ய முடியாத ஒன்றுக்காக ஏன் தவியாய்த் தவிக்கிறீர்கள்? நான் இந்தப் பரம சங்கடத்துக்கு என்ன செய்வது?"

"என்ன சொன்னாய்? ஒரு பயனும் விளையாதா! நீ என்னைக் கையாலாகாதவனென்று கருதிக்கொண் டிருக்கிறாய் போலும்! நீ மட்டும் அந்தத் துரோகி யாரென்பதைச் சொல்லி விடு. இயற்கை மரணம் வருமுன்னே அப் பாதகனை நான் யமலோகத்துக் கனுப்பிவிடுகிறேன். சொல், சீக்கிரம் சொல்!" என்று மீசையைக் கோபமாய் முறுக்கிவிட்டார்.

"சூனியக்காரனைவிடச் சூனியக்காரியே மிக மிகப் பொல்லாதவ ளென்பதைத் தாங்க ளறிந்திருந்தால்..."

"என்ன! சூனியக்காரியா! எவளா யிருந்தால்தான் எனக்கென்ன? நீ யூதர்களின் தவ்ராத் வேதத்தைப் படித்துவிட்டு, அவர்கள் கட்டிவிட்டிருக்கும் பொய்க் கதைகளைப் படித்துவிட்டு, சூனியக்காரிகளுக்கு இப்படி யெல்லாம் பயப்படுகிறாய் போலும்! எனக் கொன்றும் பயமில்லை. எவளாயிருப்பினும் சரியே! பாபிலோனியாவிலுள்ள—அங்குள்ள கிணற்றுள்ளே தலைகீழாய்த் தொங்கும் ஹாரூத் மாரூத் தென்னப்படும் வானவர்களின் வித்தை கற்றுள்ள பில்லி சூனியக்காரியாயினும் சரிதான்! எனக்குக் குழந்தை பிறக்காமல் தடை போட்டுக்கொண்டிருக்கும் அவளை ஒரே வீச்சில் இரு துண்டாக நான் வெட்டி வீழ்த்தவேண்டும்!"

ஷஜருத்துர் பதில் பேசாம லிருந்தார். அவர் எந்த எல்லை வரை மூஈஜுத்தீனைக் கொண்டுபோய் நிறுத்த வேண்டுமென்று திட்டம் வகுத்து, வஞ்சகமான பசப்பு வார்த்தைகளால் தந்திரமாக நடித்துப் பேசி வெற்றி பெறப் பெரிதும் விழைந்து நின்றாரோ, அத்துணைப் பெரிய வெற்றியையும் மிக வெளிதிலே பெற்றுவிட்டார். எனவே, இன்னம் எப்படி நடந்துகொண்டால் அவ் வெற்றி முழுதையும் செயலாற்று முறையிலே கொண்டுவந்து சேர்க்க இயலுமோ, அப்படிப்பட்ட துறையைத் துருவிக் கண்டு பிடிப்பதிலே மிக விரைவாக அவரது மூளை வேலை செய்துகொண் டிருந்தது.



"ஷஜருத்துர்! இன்னம் என்ன யோசிக்கிறாய்? ஆண்டவன்மீ தாணையாக, நான் சொல்கிறேன்: நம் வாழ்வுக்குக் கேடு சூழும் அச்சூனியக்காரியை நான் மன்னிக்கப்போவ தில்லை; ஒருகாலுமில்லை. நீ யோசிக்காதே! இப்போதே சொல்லிவிடு! உன்னை நான் காப்பாற்றுகிறேன். அவளை நான் கண்ட......"

"வேண்டாம், நாதா! வேண்டாம்! பெண் பாவம் பொல்லாதது. அவளைத் தாங்கள் வெட்டி யெறிவதால் பயனில்லை ஆனால், அவள் இனியும் தன்னுடைய விஷமத்தனத்தைப் பிரயோகிக்க முடியாதபடி செய்துவிட்டாலே போதும்."

"ஷஜருத்துர்! விளையாடாதே! அப் பொல்லாத பழிகாரியின்மீது நான் என்ன நடவடிக்கைகளை எடுக்கவேண்டுமென்பதை நீ இப்போது ஒன்றும் கூறத் தேவை யில்லை. எனக்கு எல்லாம் தெரியும். பாவிகளைத் தண்டித்தால் பாவமொன்றும் வந்துவிடாது. சூனியக்காரிகளைச் சுட்டெரிக்கவேண்டும்."

"நாதா! நான் அக் காதகி யாரென்பதைத் தெரிவிக்கு முன்னர் அவள் சம்பந்தமாக எனக்கொரு வாக்குக் கொடுப்பீர்களா? பிரமாத மொன்றுமில்லை! விஷயம் இதுதான்: அவளுக்கு வழங்கவேண்டிய நீதியை நானே தான் வழங்கவேண்டும். என்ன சொல்கிறீர்கள்?"

மூஈஜுத்தீனுக் கிருந்த ஆத்திரமும் பொறுமையின்மையும் ஹத்து மீறிவிட்டன. "உன்னைக் கட்டிக்கொண்டு ஸாலிஹ் எப்படித்தான் மாரடித்தாரோ, தெரியவில்லையே! ஏ ஷஜருத்துர்! உன்னிடம் சிக்கிக்கொள்கிறவர்களை நீ ஏன் இப்படி யெல்லாம் வாட்டி வதைக்கிறாய்?—சரி. உன்னிஷ்டம் போலே நடக்கட்டும்! யார் அந்தத் துரோகி? சொல் பார்ப்போம்!"

"என்னருங் காதலரே! நீங்கள் என்னைக் கட்டிக்கொண்டு மாரடிப்பதாக மறைமுகமாகக் கூறியது என் நெஞ்சைச் சுடுகிறது பரவாயில்லை! தங்களுக்கேன் நான் வீண் வருத்தத்தை உண்டுபண்ணவேண்டும்? தாங்கள் என்னை விடாமல் வற்புறுத்திய காரணத்தால் மட்டுமே வேறு வழியின்றிக் கூறுகிறேன்: தங்களுக்கும் எனக்கும் புத்திரபாக்கியம் அறவே தோன்றக்கூடாதென்று அல்லு பகல் அறுபது நாழிகையும் சூனியத்துக்கு மேல் சூனியத்தை ஓயாமல் செய்து வருபவள் என்மீது அநியாயமாய் அசூயைகொண்டு விட்ட தங்கள் முதல் மனைவி மைமூனவாகவே விளங்கி வருகிறாள். அவளுக்குத் தங்கள் மாமனார் அபுல்ஹஸன் கால் கொடுத்துத் தாங்கிக்கொண் டிருக்கிறார்!" என்று பெரிய பாறாங்கல்லைத் தூக்கி மூஈஜுத்தீன் ஐபக்கின் தலைமீது போட்டார் ஷஜருத்துர் என்னும் 'பழையனூர் நீலி!'

துள்ளிக்கொண்டும், துடித்துக்கொண்டும், பதறிக்கொண்டும், எண்ணெயில் விட்ட பணிகாரம் மாதிரி விம்மிக்கொண்டுமிருந்த ஐபக், ஷஜருத்துர்ரின் இவ்விடியேற்றைக் கேட்டு, செத்த பிரேதம்போல் விறைத்துப் போயினார். வதனம் வெளுத்துச் சுருங்கிவிட்டது; மேனியெல்லாம் குலுக்கிக் குறுகிவிட்டது; பிளந்த வாய் மூடிவிட்டது. ஷஜருத்துர் கபடத்தனமாய்த் தயாரித்த பொறிக்குள்ளே வலியச்சென்று சிக்கிக்கொண்ட அவர் 'கவர் பிளந்த மரத்துளையில் கால் நுழைத்துக் கொண்டே ஆப்பதனைப் பிடுங்கிவிட்ட குரங்கதனைப்போல்' அகப்பட்டு உழல லாயினர். அவர் கண்ணெதிரில் பூவுலகம் முழுதுமே இருண்டுவிட்டது. செய்வ தின்னதென்று ஒன்றும் புலனாகவில்லை. மூமியாபோலே மௌனமாய் விறைத்துப் போயினர்.

"நாதா! என்ன யோசிக்கிறீர்கள்? அந்தச் சூனியக்காரியின் பெயரை நான் உச்சரித்தவுடனே, தங்களுக்கிருந்த கோபத்தில் கார்ருப் பறந்துபோய் அவளைக் கணப்பொழுதில் கைது செய்து இங்குக் கொணர்ந்து நிறுத்துவீர்க ளென்றல்லவோ எதிர்பார்த்தேன்? இவ்வளவு சடுதியில் எப்படித் தங்களின் கொதிப்பேறிய உதிரம், பனிக்கட்டி போல் கெட்டியாய் உறைந்துவிட்டது? தங்கள் மனைவியாயிற்றே என்பதற்காகவா யோசிக்கிறீர்கள்? நானும் அதை உத்தேசித்தேதான் இத்தனை நாட்களாகப் பேசாம லிருந்தேன். நீங்களே என் உயிரை வாங்கினீர்கள். இப்போது வேறு மார்க்கமின்றி உண்மையை உரைத்துவிட்டேன். 'கையாலாகாதவன் என்று என்னை நீ கருதிக்கொண்டிருக்கிறாய்?' என்று சற்றுமுன் சபதம் கூறிய தங்கள் நாவு இப்பொழுது எங்கேயோ புகுந்து மறைந்துகொண்டதே! நல்ல சுல்தான், நல்ல மலிக்!"

மூஈஜுத்தீன் இன்னது பேசுவ தென்று ஒன்றும் புலனாகாமல் பித்துப்பிடித்த பைத்தியக்காரனினும் பரிதாபகரமாகப் பல்லிளித்

தார். மறந்திருந்த மைமூனு வென்னும் அந்த அபலையான தர்மபத்தினியின் திருவுருவம் அவர் கண்முன்னே வந்து நின்றது. இறுதி முறையாக வீட்டைவிட்டு வெளிக்கிளம்பும்போது அவள் வழி யனுப்பிவைத்த அவலக் காட்சி அவருடைய ஞாபகத்துக்கு வந்தது. அரசனை நம்பிப் புருஷனைக் கைவிட்ட கதையே போல், அரசியை நம்பி மனைவியைக் கைகழுவிய கதையாய்ப் போய் முடிந்ததே என்று கையைப் பிசைந்தார். ஒரு பாபமுமறியாத அபலை மைமூனுவை இந்தப் பிசாசு போன்ற ஷஜருத்துர் வீணே பழி தூற்றுவதுடன், அவளை அக்கிரமமாகச் 'சூனியக்காரி' என்று கூட அழைக்கிறதே என்று மனம் பதறினார். சூழ்ச்சிக்காரியாகிய இந்த ஷஜருத்துர்ரின் கைகளிலே சிக்கிக் கொண்டு தாம் பரிதபிக்கிற கேவலமான நிலையை யுன்னிக் கைசேதப்பட்டார். தெரியாத்தனமாக இம் மாயக்காரியின் சாஹஸங்களுக் கெல்லாம் அடிமையாகி, மானத்தை யிழந்து, சுயமரியாதையை விற்று, சுயேச்சையைப் பறிகொடுத்து, மனிதர்களுளெல்லாம் மிகக் கீழானவனுகத் தாம் இழிய வேண்டி வந்ததே என்று மனம் புழுங்கினார். இவள் தந்திரமாய் விரித்து வைத்த விசிறிவலைக்குள்ளே தாமே தம் அவசர புத்தியால் ஆத்திரப்பட்டு வலியச்சென்று வீழ்ந்து மாட்டிக் கொண்டதை யுன்னி யுன்னி மனம் நைந்தார். இனி என்ன செய்வ தென்று ஒன்றுந் தோன்ருது திகைத்தார்; விழித்தார்; வெதும்பினர்.

"இனி யோசிப்பதில் பயனில்லை, நாதா! உங்களுடைய ஆருயிர் மனைவியாகிய, இம்மிஸ்ரின் வன்மை மிக்க சுல்தானுவாகிய நான் எனக் கென்று ஏவிவிடப்பட்டிருக்கும் சூனிய மந்திரத்திலிருந்து விடுதலை பெற்றுலன்றி, தங்களுக்கும் எனக்கும் புத்திரப் பேறு என்னும் பாக்கியம் கிட்டப் போவதில்லை. அப்படிப்பட்ட பூரண விடுதலை எனக்கும் தங்களுக்கும் கிடைக்க வேண்டு மென்ருல், இக்கணமே அச் சூனியப் பைசாசமாகிய மைமூனுவைத் தாங்கள் என் முன்னர்க் கொணர்ந்து நிறுத்தியாக வேண்டும். தாங்கள் என்னை மனப்பூர்வமாகக் காதலிப்பது வாஸ்தவமென்ருல், தங்கள் மூலமாக நான் குழவிகளைப்பெற வேண்டுமென்று தாங்கள் கவலைப்படுவது மெய்யென்ருல், இப்படித் தாங்கள் மௌன விரதம் மேற்கொள்வதற்குக் கொஞ்சமும் அர்த்தமேயில்லை. அன்றியும், வீண் காலதாமதம் செய்வதனல் அவள் இன்று இங்கு நம்மிடையே நடந்த எல்லாவற்றையும் எப்படி யாவது தெரிந்துகொண்டு விடுவாள். மேலும் இன்னம் கொடூரமாக வெல்லாம் தன் சூனிய வித்தையைப் பிரயோகிக்கத் தொடங்குவாள். சூனியம் பொல்லாதது; மிகமிகப் பொல்லாதது."

"ஏ ஷஜருத்துர்! என் மைமூனு நிச்சயமாக அப்படிப்பட்ட பொல்லாத சூனியக்காரியாகவே விளங்குகிருள் என்பதை நிச்சயமாகத் தெரிந்து கொள்ளா முன்னம்......," என்று மூஉஜுத்தீன் மெல்ல வாய்திறந்தார். ஆனல் திறந்த வேகத்தைவிட அதிகமான வேகத்திலே வாய்மூட நேர்ந்தது.

"அவள் சூனியக்காரியா என்பதை நிச்சயமாகத் தெரிந்து கொள்ள வேண்டும்! இன்னம் என்ன சாட்சியங்கள் வேண்டியிருக்கின்றன? முன்னம் மன்ஸூர் கலீலைப் பெற்ற என் வயிற்றிலே வேறு கரு எப்படித் தரிக்காமலிருக்க முடியும்? எல்லாம் அந்தக் காதகியின் வித்தை யல்லாமல் வேறென்ன? எனக்குக் குழந்தை பிறக்காமற் போனுல் தானே இந்த ஸல்தனத்துக்கு சுல்தானுவாக உயர்ந்துவிடலா மென்னும் பேராசை யொன்றே அவளை இப்படி யெல்லாம் செய்யத் தூண்டுகிறது. சும்மாவா பெரிய மனிதர்கள் சொல்கிருர்கள், சூக்ஷுமக்காரியை அண்டினுலும் சூனியக்காரியை அண்டக்கூடா தென்று? அவள் எனக்கு இன்னம் என்னென்ன தீமைகளைச் செய்ய வேண்டு மென்று சதிபுரிகிருளோ! தாங்களோ, ஒருவிதமான கவலையும் கொள்ளாமல் இந்த ராஜபோக வாழ்க்கை மட்டும் போதுமென்று இறுமாந்து விடுகிறீர்கள்! யாரைச் சொல்லி என்ன பயன்? இப்படி யெல்லாம் பொல்லாவிதியை நான் அனுபவித்துத் தீரவேண்டு மென்று இறைவன் என் தலையில் எழுதிவிட்டிருக்கிருன்!" என்று ஷஜருத்துர் பேசும் பொழுதே, இரண்டொரு சொட்டு முதலைக்கண்ணீர் தானே வடிந்தது.

"ஷஜர்! சாட்சிய மில்லாமலும், நிரூபணமில்லாமலும் நாம் மலிக்குல் அஷ்ரபை வேலை தீர்த்த கதையாகவல்லவோ இதுவும் காணப்படுகிறது! மைமூனு உனக்கு விரோதமாக எப்படிப்பட்ட சூழ்ச்சி செய்தா ளென்பதை நன்கு தெரிந்து கொள்ளாமல் நான் எப்படி நடவடிக்கை எடுப்பது? என் ஸ்தானத்திலே உன்னை வைத்துப் பார்!"

"ஓஹோ! நான் மலிக்குல் அஷ்ரபுக்காகப் போட்ட பொய்த் திட்டத்துக் கொப்பவே இந்தத் தவறுன கூற்றையும் கூறுகிறேனென்று தாங்கள் சூசகமாகக் கூறுகிறீர்கள் போலும்! நானென்ன மோசக்காரியா, அல்லது பொய்ந்நடிப்புக்காரியா? அரசதந்திர யுக்திக்காக நான் ஏதாவது அஷ்ரபுக்கு விரோதமாகச் செய்திருந்தால், அதை அப்படியே எடுத்து இதற்கும் பொருத்துவதோ? பேஷ்! நன்ருயிருக்கிறது!—நிச்சயமாக நான் சொல்லுகிறேன். நாளைக் காலைக்குள் அவள் இங்குக் கொணரப்படுவாள். மிஸ்ரின் ஸல்தனத்துக்கும், மக்களின் நன்மைக்கும் பதவிப் பிரமாணம் செய்து கொடுத்திருக்கும் நீங்கள், அந்த மைமூனு வென்னும் எம்முடைய துரோகியை அக்கணமே தலாக்குச் சொல்லிவிடா விட்டால்—அவளை விவாக விமோசனமளித்து அவளிடமிருந்து நம்மெல்லாரையும் காப்பாற்றி விடாவிட்டால், சுல்தானு ஷஜருத்துர்ரின் நடவடிக்கைகள் என்ன விபரீதமாய்ப் போய்முடியு மென்பதை நான் இப்போது கூறமுடியாது! என்ன, யோசிக்கிறீர்கள்? என்னரும் பிராணநாதா!"

"ஏ ஷஜருத்துர்! வேண்டாம், வேண்டாம், வேண்டாம்! என்னை நீ என்ன வேண்டுமாயினும் செய்துகொள். ஒரு பாபமு மறியாத உத்தமப் பத்தினியாகிய அவளுடைய வாழ்க்கையை இன்னம் பாழ்படுத்த விரும்பாதே! அஃது அல்லா(ஹ்)வுக் கடுக்காது."

"அப்படியானுல், நான் மட்டும் அத்தகைய உத்தமப் பத்தினியல்ல போலும்! முடியாது, முடியாது! நீங்கள் எனக்குச் சற்றுமுன்னர் ஆண்டவன்மீது ஆணையிட்டுச் சொன்ன சத்திய வாக்கை எப்படியும் நிறைவேற்றித்தான் தீரவேண்டும்; அவளுக்குத் தலாக் கொடுத்துத்தான் ஆகவேண்டும்! அவளாலேயே என் உடல் உருகுகிறது; என் உள்ளம் குமைகிறது; என் வயிறு எரிகிறது. அவள் பெற்று வைத்துக்கொண்டிருக்கிற பாலகனை நாளைக்கு இந்நாட்டின் சுல்தான் என்று பிரகடனப் படுத்துவதற்காகவே அவள் சதிசெய்கிருள். அச் சதியின் காரணமாகவே என்னை மலடியாக்கிக் கொண்டிருக்கிருள். என் கர்ப்பாசயத்தில் ரணமுண்டாய் விட்டது. நீங்கள் அவளைத் தலாக்குச் சொல்லித்தான் தீரவேண்டும். அவளே தன்னுடைய அழிவுக் காலத்தைச் சம்பாதித்துக் கொண்டாள். என்ன சொல்கிறீர்கள்?"

மூஉஜுத்தீனின் கண்கள் கறகறவென்று சுழன்றன; கைகள் விலவிலத்தன; மூளை கிறுகிறுத்தது, அப்படியே செயலிழந்து பொத்தென்று சாய்ந்து, பேச்சு மூச்சின்றிப் பெருமயக்கத்துள் வீழ்ந்துவிட்டார்.

(தொடரும்)

இப்னு சுஊத் மன்னர் காலஞ் சென்று விட்டா ரென்ருலும், அவர் புத்துயிரூட்டி விட்ட அரப் நாடு சிரஞ்சீவியாகவும், சிறப்புற்ற பெருநாடாகவும் திகழ்ந்தே வருகிறது.

# நபிகள் திலகம் (சல்) தோன்றிய நாட்டின் இணையற்ற பெருவளம்

[N. B. A. வரைவது]

சூனியத்திலிருந்து சூக்ஷ்மம தோன்றும்படி செய்வது இறைவனின் தனிப்பெருஞ் சக்தியாகும். அதற்குச் சிறந்த உதாரணமாக நமது உடம்பையே எடுத்துக்காட்டாக வைத்துக் கொள்ளலாம். இவ்வளவு பெரிய உடல் கண்ணுக்கோ கருத்துக்கோ புலனுகாத வெறும் சூனியத்திலிருந்தே தோன்றியிருக்கிற தன்ருே? அதே மாதிரியாகத்தான், ஒரு வளப்பமுமில்லாத, ஒரு நாகரிகமும் நிலவாத, ஒரு ஞானமும் திகழாத வெறுஞ் சூனியமான பொட்டைவனப் பாலைவனத்திலே உலகம் இதற்கு முன் எங்கும் கண்டோ கேட்டோ இராத வண்ணமாக ஒரு மாபெரும் இறுதி நபியை (சல்) ஆண்டவன் சென்ற 1426 ஆண்டுகட்கு முன்னே அவதரிக்கச் செய்தான். அந்நபி தோன்றிய பின்னர் அந்தப் பாலை நிலமாகிய வறண்ட பிரதேசம் மட்டுமின்றி, அகில உலகின் திக்கெட்டுமே ஞான ஜோதிச் சுடரில் ஒளிவீசி ஜொலிக்கத் தொடங்கி விட்டன. எனவே, வெறும் பாலைவனம், ஒரு நீரருவியோ, கடற்றுறைப் பட்டினமோ, வளப்பமிக்க வயல் வெளியோ அடுத்திராமல் தனித்துப் பயனற்றதுபோல் விளங்கி வந்தாலும், அந்தச் சுடுநிலம் மிகவும் குளிர்ச்சியான நிழலை நல்கக் கூடிய பெரு நிலமாக உயர்ந்தோங்கும் வண்ணம் செய்துவிட்ட பெருமை முற்றும் இறைவனைச் சேர்ந்ததாகி விட்டன.

அரப் நாட்டு வனாந்தரத்திலே முஹம்மத் (சல்) தோன்றினார்கள்; குர்ஆன் ஷரீப் அம் மஹானுக்கு இறக்கியருளப்பட்டது. அவ் வேத கிரந்தத்தின் சுடரொளிப் பிரகாசம் உலகைப் பீடித்திருந்த பயங்கரமான காரிருளை யோட்டி யொழித்துவிட்டது. ஆனல், அவ்வளவு பெரிய சாதிக்க முடியாத பெருஞ் சாதனையைச் சாதித்த அரப் நாடு சமீப காலம் வரையிலே கூட மிகவும் பிற்போக்கான நாகரிக முடையதாகவும், யாதொரு விதப் பொருள் வருமானத்தையும்பெற்றுக்கொள்ள முடியாத மிக ஏழ்மையும் தரித்திரமும் மிக்கதாகவும், மற்ற உலக நாடுகளுடன் ஒப்பிட்டுப் பார்க்கையில் மிகவும் கீழான பொருளாதார அந்தஸ்தை அடைந்து நின்ற தன்மையுடையதாகவும் காணப்பட்டு வந்தது. உலக முஸ்லிம்கள் ஆண்டுதோறும் புனித யாத்திரை செய்யவேண்டிய முக்கியமான தெய்விக அம்சம் பொருந்திய அரப் நாடு இப்படி யெல்லாம் ஏன் இழிவுற்று நின்றிருக்க வேண்டுமென்று வினவுகிறீர்களா?—ஆம். இறைவன் தன்னுடைய அகடிதகடனு சக்தியை அடியவருள்ளத்துள்ளே ஆழமாய்ப் பதியச் செய்வதற்காகவே அப்படிப்பட்ட சூனிய நிலையை ஆங்கு நிலவச் செய்தான்.

ஆனல், அந்த நாட்டிலே சிறந்த சீர்திருத்த நோக்கம் படைத்த ஒரு சாதாரண மனிதரை அதே ஆண்டவன் தோன்றச்செய்தான். அம் மனிதரை அவன் அரசராகவும் உயர்த்தி வைத்தான். அந்த அரசர் அரப் நாட்டின் அதிபதியாக உயர்ந்து முப்பது வருஷங்களாவதற்குள் பொருளாதாரத்துறையில் க்ஷீணமுற்றுக் கிடந்த அதே அரப்நாட்டை மிகவும் பணக்கார நாடாக, மிகவும் சீர்திருத்தம் மிக்க பிரதேசமாக, ஒப்போ உவமையோ கூறமுடியாத தனிப் பெரும் வளமிக்க சிறந்த பூபாகமாக உயர்த்தி வைக்கும்படி இறைவன் துணைபுரிந்தான்-அந்த அரசருக்கே அப்துல் அஜீஜ் இப்னு சுஊத் என்று பெயரிட்டழைக்கிருேம். ஆண்டவன் நாடியிருந்த வண்ணம் அப் பேரரசர் சென்ற மாதம் தமது 73-ஆவது பிராயத்தில் காலஞ் சென்றுவிட்டா ரென்ருலும், அவர் விட்டுச் சென்ற சுஊதி அரேபியாவின் நிலைமை எப்படிப்பட்ட மகத்தான மேன்மை மிக்கதாக உயர்ந்து திகழ்கிற தென்பதைச் சற்றே கவனித்துப் பாருங்கள்.—

1917-ஆம் ஆண்டிலே எடுக்கப்பட்ட கணக்கு விவரப்படி பார்த்தால் அப்போது (இப்னு சுஊத் ஆட்சிக்கு முன்னே) அந் நாட்டின் ஜனத் தொகை சுமார் 35 லக்ஷம் இருந்தது; ஆனல், அந்தத் தேசத்துக்கு மொத்த வருமானம் சுமார் 3 லக்ஷம் டாலரே (சுமார் 10 லக்ஷம் ரூபாயே) யாகும். இந்தச் சொற்ப வருமானத்தைக் கொண்டே அந்நாட்டினரனைவரும் உயிர் வாழ வேண்டி யிருந்தது. இந்த வருமானமும் உலக முஸ்லிம்கள் ஹஜ்ஜுக்கு யாத்திரை செல்வதால் கிடைத்த வரும்படியேயன்றி, அரப்நாட்டிலிருந்து வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்ட பண்டங்களுக்குக் கிடைத்த கிரயமன்று. ஏனென்ருல், அந்தக் காலத்தில் அரப் நாட்டிலிருந்து வெளிநாடுகளுக்கு அனுப்பத்தக்கபண்டமோ, கனிப் பொருளோ, அல்லது வேறு இயற்கைப் பொருளோ ஏதும் விளைந்தது மில்லை; உற்பத்தி செய்யப்பட்டது மில்லை. ஆனல், அந்தப் பாலைவன நாட்டுக்கு இப்னு சுஊத் அதிபதியாக உயர்ந்தார். அவர் அந்நாட்டில் உற்பத்தியாகும் எண்ணெயை எந்த அளவுக்கு வளமுறச் செய்துவிட்டா ரென்ருல், சென்ற 1953 மார்ச் முடியவுள்ள ஒரு வருஷத்தில் மட்டும் அவர் அரேபியன் அமெரிக்கன் எண்ணெய்க் கம்பெனி (Aramco) என்னும் அமெரிக்க எண்ணெய் ஸ்தாபனத்திலிருந்து பதினெட்டரைக் கோடிப் பவுன் (சுமார் ரூ. 245 கோடி) லாபமாகப் பெற்றுக் கொண்டார். 10 லக்ஷம் ரூபாய் கூட வருமான மில்லாத நாட்டின் அதிபதியா யுயர்ந்தவர் ஒரே வருஷத்தில் 245 கோடி ரூபாய் லாபம் (royalty) பெற்ரு ரென்ருல், அந்த நாட்டை அம்மன்னர் எவ்வளவு தூரத்துக்குச் சீர்திருத்தி யிருக்க வேண்டு மென்று நினைக்கிறீர்கள்?

சென்ற ஆண்டிலே நம் சஞ்சிகையில் (1952 டிஸம்பரில்) வெளிவந்தகட்டுரையொன்றிலே அல்ஹாஜ் டாக்டர் ஜார்ஜ் கைருல்லா வென்பவர் இப்னு சுஊத் அரசாங்கத்திலே வழங்கப்பட்டு வரும் நேர்மையான ஆட்சி முறைகளைப் பற்றி விவரமாக வரைந்திருந்தார். அதில் அந்நாட்டுப் பொருளாதார சுபிக்ஷத்தைப் பற்றி அவர் அதிகமான விவரத்தை விளக்கிக் காண்பிக்க வில்லை. எனவே, இந்தக் கட்டுரையை வரைய வேண்டியதாயிற்று.

சுஊதி அரேபியா இன்றுங்கூட ஒரு ஸ்திரமானவாழ்க்கையைநடத்தும் நாடாகஉயர்ந்துவிடவில்லை. பல அரபிகள் இன்னமும் ஒட்டகம் ஓட்டியும், கால் நடைகளை மேய்த்தும், வெவ்வேறிடமாக அலைந்து திரியும் வாழ்க்கையையே பின்பற்றி வருகிருர்கள். எனினும், சென்ற முப்பதாண்டுகட்கு முன்பிருந்த நிலைமை மாறி, நாட்டின் வறுமை நீங்கி, டாலரும் பவுனும் வந்து குவிகிற நாடாக இப்போது அது முன்னேறி விட்டமையால், மேனுட்டு நாகரிகம் சிறுகச் சிறுக அந்நாட்டுள் நுழைந்து அவ்வரபிகளின் வாழ்க்கைத்தரத்தையே மிகவாக மாற்றிக் கொண்டு வருகிறது. பல அரபிகள் எண்ணெய்க் கம்பெனியில் ஊழியம் புரிகிருர்கள். நவீன முறைப்படியான கல்வித் திட்டங்கள் புகுத்தப்பட்டிருப்பதால், சிறுவர்களுக்கு நாகரிகமான கல்வி போதிக்கப்படுகிறது.

உலக மக்களுக்கு ஒரு விதத்திலும் பயன்படாத வெற்றுப் பாலைவனக் காடு என்று சமீபகாலம் வரை கருதப்பட்டு வந்த அந்த சுஊதி அரேபியா இப்போது மிகவும் உயர்ந்த வகையில் முழுப்பயனும் நல்கத்தக்க உன்னதமான நாடாகப் பரிணமித்து விட்டது. உதாரணமாக, ஜித்தாத் துறைமுகப்பட்டினத்திலே, ஆண்டொன்றுக்கு 4 லக்ஷம் ராத்தல் எடையுள்ள உயர்ரகமான ஸோப்பு உற்பத்தி செய்யக் கூடிய தொழிற்சாலையொன்று சென்ற வருஷம் நிருமிக்கப்பட்டது. அதே பட்டினத்தில் தோல் பதனிடும் சாலைகளும். தோற் கருவிகள் செய்யும் தொழிற்சாலைகளும் கூடிய சீக்கிரத்தில் வேலை தொடங்கத்தக்க விதமாக ஆரம்பஞ் செய்யப்பட்டுவிட்டன. பிரிட்டிஷ்காரர்களே அந்தத் தொழில் ஸ்தாபனங்களை நிர்வகிக்கப் போகின்றன ரெனினும், அரபிகளே அந்த ஸ்தாபனங்களில் வேலைக்காக அமர்த்தப்படுவர்.

இப்னுசுஊத் மிகவும் மதிநுட்பம் படைத்த மன்னராக விளங்கி வந்தமையாலும், அரப் நாட்டில் கிடைக்கும் எந்தப் பொருளையும் மதிப்புள்ளதாக ஆக்கி அதன் மூலம் சேரக் கூடிய நிதி வருவாயைக்கொண்டு தம் நாட்டைப் பொருளாதாரத் துறையில் முன்னேற்றிவிடவேண்டுமென்று ஆவல்கொண்டு நின்றமையாலும் அவர் எந்த ஒரு சிறு விஷயத்தையும் தீர்க்கமாக ஆராயமுற்பட்டார். ஆண்டுதோறும் ஹஜ் செய்வதற்காகச் செல்லும் யாத்ரிகர்கள் மினுவிலே ஆயிரக்கணக்கான ஆடுகளைக் குர்பானீ கொடுப்பதையும், அவர்கள் அந்தக் குர்பான் இறைச்சியை அங்கேயே வெறுமனே போட்டுச் செல்வதையும் அவர் கண்டார். சுமார் 5 லக்ஷம் ஆடுகள் ஹலாலான முறையில் அந்த ஹாஜீகளால் ஆண்டுதோறும் பலியிடப்படுகின்றன. ஆனல், ஹாஜீகள் தங்களுக்கிருக்கிற வேறு அலுவல்கள் காரணமாக அந்தக் குர்பான் இறைச்சியை அவ்வப்படியே போட்டு விட்டுச் சென்றுவிடுகிருர்கள், இப்படிப்

பட்ட நல்ல இறைச்சி வெறும் வனாந்தரத்தில் ஆண்டுதோறும் பாழ்படுத்தப்படுவதைக் கண்ட இப்னுசுஊத் அந்த இறைச்சிகளையெல்லாம் நன்ருய்ப் பக்குவப்படுத்தி டின்களில் அடைத்து வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்வதே சரி யென்று முடிவு செய்தார். ஹராமான வகையில் தயாரிக்கப்படும் மேனாட்டு இறைச்சிட் டின்களை விட, இந்த ஹலாலான இறைச்சிட் டின்களுக்கு மிகுதமான கிராக்கி ஏற்படுமென்பதை அவர் உணர்ந்தார். எனவே, விஞ்ஞான பூர்வமான முறையில் குர்பானி இறைச்சியைச் சுத்தஞ் செய்து, சுகாதாரத்துக்கு ஒத்த முறையில் அதைப் பக்குவப்படுத்தி, காற்றுப் புகாத டின்களில் அடைத்து வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செயவதற்கு வசதியான தொழிற்சாலை யொன்றைக் கட்ட முற்பட்டார். அந்தத் தொழிற்சாலை இன்னம் கட்டி முடிக்கப்படவில்லை யென்றாலும், கூடிய விரைவில் இப்னு சுஊத் கண்ட கனவு பலித்து, நம்மெல்லார்க்கும் அரப் நாட்டு ஆட்டிறைச்சி அப்பட்டமாகக் கிடைக்க வழிபிறக்கத்தான் போகிறது.

சுஊதி அரேபியாவின் கிழக்குப் பகுதியாகிய அல்ஹஸா என்னும் பகுதி பாரசீகக் குடாக்கடலருகிலே இருக்கிறது. மேற்குப் பகுதியாகிய ஜித்தா எப்படிச் செங்கடலிலே முக்கியத் துறைமுகப் பட்டினமாகக் காணப்படுகிறதோ அப்படியே அல்ஹஸாவும் கிழக்குப் பகுதியிலே முக்கியப் பட்டினமாகத் திகழ்ந்து வருகிறது. இந்த அல்ஹஸாவிலே ஒரு ஜவுளி மில்லும் ஒரு பெரிய அச்சகமும் நிர்மாணிக்கப்பட்டு வருகின்றன. சுஊதி அரேபியாவிலே ஒரே ஒரு பத்திரிகையே வெளிவந்துகொண்டிருக்கிறது. அந்தப் பத்திரிகையும் அரசாங்கம் நடத்துகிற பத்திரிகையாகும். இனிமேல் அந்த அச்சகம் வலுவுற்றுவிடுமானல் சுஊதி அரேபியாவில் பலதிறப்பட்ட நூல்களும் பத்திரிகைகளும் சீக்கிரமே அதிகரித்துவிடுமென்று எதிர்பார்க்கலாம்.

பேரீச்ச மரங்கள் மிகச் சிறந்த பலனைத் தரவேண்டுமென்ருல், அவற்றின் வேர்கள் மிகக் குளிர்ந்த நீரில் நனைந்திருத்தலும், அவற்றின் ஓலைகள் மிக உஷ்ணமான கொடிய வெயிலில் தகிப்படைந்துகொண்டிருத்தலும் மிகவும் அவசியமாகும். எந்த ஓரிடத்தில் இவ்விரண்டு தன்மைகளும் பொருந்தியிருக்கின்றனவோ அங்கேதான் மிக மிக ருசியான, மிகவும் புஷ்டியுள்ள பேரீந்துகள் உற்பத்தியாகும். அரப் நாட்டிலே ஹோ(f)பூ(f)ப் என்னும் ஓரிடத்திலேயுள்ள பேரீச்ச மரங்களே உலகில் மிகவுஞ் சிறந்த உன்னதமான உயரிய கனிகளை நல்குகின்றன. ஏனென்ருல், அந்த இடத்திலேதான் 130 டிகிரீ வெயில் பொசுக்கித்தள்ளும். ஆனல், தரையிலேயுள்ள மணலைக் கொஞ்சம் தோண்டிப் பார்த்தால், ஏழு நறுநீர்ச்சுனைகள் அவ்விடத்தில் இருப்பதைக் கண்டுகொள்ளலாம். இந்த நீரில் நனைந்த வேர்களும், வெயிலில் பொசுங்கிய ஓலைகளும் "கிலாஸ்" என்னும் புகழ்மிக்க நறுங்கனிகளை நல்கச் செய்கின்றன. அந்த அப்பட்டமான உயர்ரகப் பேரீந்துகளை உற்பத்தி செய்வதற்காக அவ்விடத்திலே 20 லக்ஷத்துக்கும் மேற்பட்ட பேரீச்ச மரங்கள் பயிர் செய்யப்பட்டுள்ளன. அவ்வளவு பெரிய பிருமாண்ட தோட்டத்தில் விளையும் கனிகள் பெருத்த அளவில் பாடம் பண்ணப்படுவதற்கும், மிகுந்த அளவில் ஏற்றுமதி செய்யப்படுவதற்கும் ஏற்றவிதமாக ஒரு பெரிய தொழிற்சாலையும் அமைக்கப்பட்டு வருகிறது. அந்தத் தொழிற்சாலை மும்முரமாக இயங்க ஆரம்பித்ததும் உலகின் எப்பகுதிக்கும் அவ்வுன்னதமான உயர்ரகக் கனிகள் சென்று சேரத் தருணம் வாய்க்கும். ஹஜ்ஜுக்கு யாத்திரை செல்ல முடியாத ஏழைகளும் இனிமேல் சுலபமாக உள்ளூர் மார்க்கெட்டில் அந்தக் கனி வகைகளைப் பெறலாம்.

இந்த மாதிரியாகப் பேரீச்சங் கனிகளை வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யக்கூடிய திறமையை அந்தத் தொழிற்சாலை பெருக்கிவிட்டால், அரபிகளுக்கு டாலர்களும் பவுன்களும் குவியல் குவியலாக வந்து சேருமன்ருே?

காலஞ்சென்ற இப்னுசுஊத் மன்னருக்கு அரபிகள் எத்தனையோ வகைகளில் கடமைப்பட்டிருக்கின்றனரென்ருலும், அந்த நாட்டிலே அவர் மோட்டார் கார்களைக் கொண்டு வந்து நுழைத்துப் பலரைப் பிழைக்கச் செய்தமையை எவரும் மறக்க முடியாது. அரபிகள் பொதுவாக ஒட்டகங்களின் மீது ஏறியே பிழைப்பை நடத்துவர். எனவே, அவர்கள் முதன் முதலாக அரப் நாட்டிலே மோட்டார் கார்கள் நுழைக்கப்பட்டதைக் கண்டதும், எங்கே தங்கள் பிழைப்பில் மண் விழுந்துவிடுமோ என்று அஞ்சினர்கள். ஆனல், இப்னு சுஊத் கொஞ்சமும் மனந் தளராமல் மோட்டார் கார் சாதனங்களை வலுப்படுத்தினர். இதனல் அரபிகளின் வாழ்க்கை கெடுவதற்குப் பதிலாக, அவர்களுடைய வாழ்க்கைத்தரம் மிகவாக உயர்ந்து விட்டது. கண்ட கண்ட இடங்களிலும் மோட்டார் ரிப்பேர் தொழிற்சாலைகளும், பஸ்களுக்கும் லாரிகளுக்கும் மேல் அமைப்புக் கட்டிக் கொடுக்கும் ஸ்தாபனங்களும் உற்பத்தியாகி, இன்று சுமார் பதினேராயிரம் அரபிகள் தொழில் புரிந்து அவற்றில் ஊதியம் பெறுகிருர்கள். மோட்டார் சாதனம் வலுவுற்றதால் ஒட்டகங்களில் ஏற்றிச் செல்லப்படும் பொதி மூட்டைகளின் எண்ணிக்கை அதிகமாகக் குறைந்துவிடவில்லை யாகையால் ஒட்டகமோட்டிகளும் நன்ருய்ப் பிழைப்பை நடத்தி வருகின்றனர்.



கட்டாந்தரையிலும், தார் ரோடிலும், ஸிமெண்ட் ரோடிலும் கார்களை ஓட்டத்தான் உலகோர் அறிவர். ஆனல், வெறும் தொந்தி மணலிலே கார்களை எப்படி லாவகமாக ஓட்டிச் செல்வதென்னும் வித்தையை அரபிகள் மட்டுமே அறிவார்கள். இப்படி அவர்களைக் கெட்டிக்காரர்களாக ஆக்கிவிட்ட பெருமை முற்றும் இப்னு சுஊதையே சாரும்.

சுஊதி அரேபியாவின் மத்திபத்திலே ரியாத் என்னும் தலைநகர் இருக்கிறது. அங்கேதான் இப்னுசுஊத் வசித்து வந்தார். அந்தத் தலைநகரத்துக்கும், பாரசீகக் குடா வருகிலேயுள்ள எண்ணெய்க் கிணற்றுப் பிரதேசத்துக்கும் 357 மைல் தூரமிருக்கிறது. மிக மிக வேகமாய் ஓடுகிற ஒட்டகத்தின்மீது ஏறிச் சென்ற போதினும் அந்தத் தூரத்தைக் கடக்க எப்படியும் 12 நாட்களாவது பிடிக்கும். அப்படிப்பட்ட நிலைமையிலே இப்னுசுஊத் ரயில்வேயை நிர்மாணிப்பதே சரியான மார்க்கமென்று கண்டுபிடித்தார். இருப்புப் பாதைகள் போடப்பட்டன. சுமார் 5 கோடி டாலர் செலவில் அந்த 357 மைல் தூரத்தையும் 10 மணிநேர ரயிலோட்ட நேரத்தில் இணைத்துவிட்டார். இதனல் தலைநகரும் எண்ணெய்க் கிணற்றுப் பிரதேசங்களும் இணைந்தது ஒருபுறமிருக்க, அவ் விருப்புப் பாதை நெடுகவுள்ள ஊர்களும் கிராமங்களுங் கூடக் கைத்தொழி லபிவிருத்தியில் முன்னேற்றத்தைப் பெற்றுக்கொண்டு விட்டன. அந்த ரயில் பாதையை மேற்கு நோக்கி மக்கத்துடனும், பிறகு ஜித்தாவுடனும் இணைத்து விடவே இப்னுசுஊத் திட்டமிட்டிருந்தார். எனினும், அந்த எண்ணம் பூர்த்தியாகவில்லை. ஆயினும், கூடிய சீக்கிரத்தில் அவ்வேலை தொடர்ந்து நடந்து மக்காவும் ஜித்தாவும் ரயிலுடன் இணைக்கப்பட்டு விடுமென்று தெரியவருகிறது. இத்திட்டம் பூர்த்தியானல், அரப் தேசத்தின் கிழக்குக் கடற்கரையும் மேற்குக் கடற்கரையும் நல்ல முறையில் இணைக்கப்பட்டு விடும்.

சமீபத்தில் ஹஜ் செய்துவிட்டு வந்த ஹாஜிகள் சுஊதி அரேபியாவில், குறிப்பாக ஜித்தாப் பட்டினத்தில் நவீன கால முறைப்படி நிர்மாணிக்கப்பட்டுள்ள அழகிய காங்கிரீட் கட்டிடங்களைக் கவனித்திருக்கலாம். அவை மற்ற நாகரிக மிக்க நகர்களில் திகழும் அழகிய கட்டிடங்களை நிகர்த்திருக்கின்றன. இப்படிப்பட்ட கட்டிடங்களை நிர்மாணிக்கத் தேவைப்படும் ஸிமெண்ட் வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்படுகிறது. மக்கா, மதீன, தாயிப், தம்மாம், தஹ்ரான் முதலிய நகரங்களிலும் கட்டிட வேலைகள் துரிதமாக நடைபெறுவதற்கு ஸிமெண்ட் ஏராளமாகத் தேவைப்படுகிறது. எனவே, ஸிமெண்ட் தயாரிக்கும் தொழிற்சாலை யொன்று அங்கே நிர்மாணிக்கப்பட்டு வருகிறது.

வெறும் பாலைவனமாக நிலவும் அரப் நாட்டிலே பெரிய நதிகளோ, அணைக்கட்டுக்களோ இல்லாமையால், தண்ணீர்த் தேக்கங்களிலிருந்து பெறப்படும் மின்சார சக்தி அங்கே உற்பத்தியாக வழியில்லை. எனவேதான், சமீபகாலம் வரையில் மக்காவும் மதீனவும் சரியானபடி மின்சார விளக்கு வெளிச்ச வசதியைப் பெற்றுக்கொள்ள முடியவில்லை. எனினும், பாரசீகக் குடாவை யடுத்துள்ள தம்மாமில் செயற்கை மின்சாரம் உற்பத்தி செய்யப்படும் சாதனமொன்று நிர்மாணிக்கப்பட்டிருக்கிறது. அங்கிருந்தே சுஊதி அரேபியாவுக்குத் தேவையான மின்சார சக்தி உற்பத்தி செய்யப்பட்டு வருகிறது. சென்ற செப்டம்பரிலேதான் அந்த மின்சார சாதனம் இயங்க ஆரம்பித்தது. சென்ற பிப்ரவரி மாதமுதல் அதே இடத்தில் திரவரூபமாக்கப்பட்ட வாயு உற்பத்தி செய்யப்படுகிறது. அது குழாய் வழியாகத் தலைநகர் வரை வெகுதூரம் கொண்டு செல்லப்படுகின்றமையால், வழி நெடுக உள்ளவர்கள் அத் திரவத்தை விளக்கெரிக்க, மின்சாரம் இயக்க, தொழில் செய்யப் பயன்படுத்திக் கொள்ளுகிருர்கள். எண்ணெய் உற்பத்தியால் கிடைக்கும் செல்வமே இந்தச் சீர்திருத்தங்களைப் புரியப் பேருதவி செய்கின்றது.

இப்னுசுஊத் மன்னராக இருந்து நேரிய ஆட்சி புரிந்தமையால் விளைந்த நலன்கள் இவையாகும். அவர் பதவிக்கு வந்ததும் முதன் முதலாகக் கவனிக்க வேண்டியிருந்த விஷயம் அரபிகளை எப்படி ஒரு கட்டுப்

பாடான சமூகத்தினராகச் செய்வது என்பதாகவே இருந்துவந்தது. பரந்த பாலைவனம் நெடுகவும் அங்கங்கே சிதறுண்டு கிடந்தும், ஆடுமாடு ஒட்டகங்களை மேய்த்துக்கொண்டு, திக்குக்கொருவராய் விரவிக் கிடந்த பதவிகளை இப்னுசுஊத் முதன்முதலாக ஒரு கட்டுப்பாடான சமூகமாகத் திரட்டவேண்டியிருந்தது. மக்களைக் கட்டுப்படுத்தி, சிறந்த சமுதாயங்களை நிலைநாட்டி, அவர்களிடையே பலமான பிணைப்பை உண்டுபண்ணினுல் மட்டுமே நாட்டைச் சீர்திருத்த முடியும் என்பதை சுஊத் மன்னர் உணர்ந்தார். எனவே, முதலில் அந்த வேலையைச் சாதித்தார். சமூகம் கட்டுப்பாட்டையடைந்த பின்னரே முற்கூறிய அத்தனை நாகரிக முன்னேற்றச் சீர்திருத்தங்களும் அரப் நாட்டில் நுழைய வாரம்பித்தன. சுவரை வைத்துக்கொண்டுதானே சித்திரம் எழுத முடியும்? பலமான சமூகத்தை உண்டுபண்ணினுல்தானே அந்தச் சமூகத்துக்கு நலன்களை விளைக்க முடியும்? எனவே, முதலில் சுஊத் மன்னர் அந்தப் பிரிந்து கிடந்த பதவிகளை ஒன்று திரட்டினுர்; ஷரீஅத் முறைக்கு அணுவளவும் பிறழாத வகையில் அவர்கள்மீது ஆட்சி செலுத்தினுர்; அரப் நாட்டை மிகவும் பந்தோபஸ்தான ஸ்தலமாக ஆக்கினுர்; கொலை, களவு, காமம், சூது முதலிய எந்தப் பாதகமும் அந் நாட்டுக்குள்ளே அறவே நுழைய முடியாதபடி செய்தார்; அப்பால் அந்தப் பத்திரமான பூமியிலே முற்சொன்ன சீர்திருத்தங்களை நுழைத்தார்.

ஆண்டுதோறும் இப்னுசுஊத் எண்ணெய் உரிமைப் பங்காகக் கோடிக் கணக்கான பவுன்களைச் சம்பாதித்திருந்தும், அத்தனை கோடிகளையும் என்ன செய்தார்? என்று நீங்கள் வினவலாம். முற்றும் திறந்த வெளியாகிய அகன்ற பரந்த பாலைவனத்திலே எந்த ஒரு மூலையிலும் ஒரே ஒரு திருடனோ, ஒரே ஒரு கொலையோ, ஒரே ஒரு கொள்ளையோ, குழப்பமோ விளைந்துவிட முடியாதபடி கவனித்துக்கொள்ள மேண்டுமென்றால் அதற்கு அத்தனை சிப்பந்திகளும் எவ்வளவு செல்வமும் தேவைப்படும்? நாகரிக முதிர்ந்த நம்நாட்டிலே இன்று பிரதம மந்திரி நெஹ்ரு சென்னைக்கு விஜயஞ் செய்தால், அவருக்குப் பந்தோபஸ்தைச் செய்வதற்காக மட்டும் நம்முடைய பொலீஸ் இலாகா பத்தாயிரக் கணக்கான ரூபாய்களை அள்ளி வீசிச் செலவிட வேண்டியிருக்கிறது. இங்ஙனமிருக்க, சுஊத் அரேபியா முழுதும் மிகவும் பத்திரமான பந்தோபஸ்தை எந்தக் காலமும் சகல மக்களிடையேயும் நிலவச் செய்ய வேண்டுமென்றால், அதற்கு எத்தனை கோடிப் பவுன்கள் தேவைப்பட்டிருக்கும்? உலகின் வேறெந்த நாட்டிலுமே நாம் சுஊதி அரேபியாவைப் போன்ற அவ்வளவு பத்திரத்தையும் பந்தோபஸ்தையும் கண்டுகொள்ள முடியாது. இந்தச் சாதிக்க முடியாத பெருங் காரியத்தைச் சாதித்து முடிக்கவே இப்னு சுஊத் தமக்குக் கிடைத்த கோடிக்கணக்கான பவுன்களை வாரியிறைத்தார். அங்கங்கேயுள்ள ஷெய்குகளுக்கு அவர் தாராளமாய்ச் சம்பளம் கொடுத்தார். அவரவரும் உண்மையாளராக நடந்துகொண்டனர். அதன் விளைவாக, இன்று அந்நாட்டிலே ஒரு திருடனுங்கூட இல்லாமலாகி விட்டது.

இப்னு சுஊத் காலஞ் சென்றுவிட்டார். ஆனுல், அவர் சாதிக்க முடியாத பெருஞ் சாதனையைச் சாதித்துச் சென்ற வித்தைகளை உலக முஸ்லிம்கள் என்றைக்குமே மறக்க முடியாதபடி செய்துவிட்டுச் சென்றுள்ளார். நாகரிகம் முதிர்ந்ததாகக் கருதப்படும் அமெரிக்காவிலிருந்து, கம்யூனிஸ சுவர்க்கமென்று அழைக்கப்படும் ருஷ்யா, சீனுவிலிருந்து, இரண்டுங் கெட்ட பாக்கிஸ்தான், இந்தியாவிலிருந்து எந்த ஒரு நாட்டிலும் திருடும் வியபிசாரமும் அறவே கிடையாது என்று சொல்ல முடியாத கொடிய சந்தர்ப்பம் சூழ்ந்துள்ள இற்றை நாளில் சுஊதி அரேபியா மட்டும், “இந்த நாட்டிலே ஒரு திருடன்கூடக் கிடையாது; இங்கே எந்த ஆணும் எந்தப் பெண்ணும் வியபிசாரம் புரியவே முடியாது!” என்று நிமிர்ந்து நின்று மார்தட்டி அறைகூவக் கூடியதா யுயர்ந்து நிற்கிறதென்றுல், இவ்வளவு பெரிய ஈடிணையற்ற பெரும் புகழுக்கு யார் ஜவாப்தாரி யென்று நினைக்கிறீர்கள்?

இறுதி நபி தோன்றிய புனித பூமி சமீப காலம் வரையிலேகூட மிகவும் கேவலமான கதியிலே தள்ளப்பட்டுக் கிடந்தது. இப்னு சுஊத் தோன்றினுர்; நபிகட்டிலகம் (சல்) காட்டிச் சென்ற வழியைக் கடுமையான வகையில் அமல் நடத்திக் காட்டினுர். நாட்டை அவர் பந்தோபஸ்து மிக்க ஸ்தலமாக மட்டும் ஆக்கி விடவில்லை; ஆனுல், செழிப்பான, நாகரிக முதிர்ந்த, தொழில்வளம் மிகுந்த, செல்வம் கொழிக்கிற உன்னதமான நாடாகவும் உயர்த்திச் சென்றுவிட்டார். அவரை வஹாபி யென்று இடித்தும் இழித்தும் பல முஸ்லிம் வைதிகர்கள் அழைக்கின்றனர். ஆனுல், வேறெந்த ஸுன்னத் வல் ஜமாஅத் சுல்தானுே அல்லது மன்னரோ இதற்குமுன் சாதித்து முடிக்க இயலாத அரும்பெரும் சாதனைகளை இந்த வஹாபி மன்னரே வெற்றிகரமாய் நிலைநாட்டிக் காண்பித்துப் பெரும் புகழ் பெற்றுவிட்டா ரென்பதை மறவாதீர்கள்.



சென்ற மாதத் தொடர்

# இஸ்லாம் என்ன கொடுக்கிறது? என்ன கேட்கிறது?

[சையித் முஷ்தாக் அஹ்மத்]

இஸ்லாம் இன்ஸானுக்கு வழங்கியிருக்கும் சகலவகைப் பிரயோஜனங்களையும் இங்கெடுத்து விவரிக்க இடமின்மையால், மேலே கூறியுள்ளவற்றேடு நிறுத்திக்கொண்டு, இம் முஸ்லிம்கள் இஸ்லாத்தினுல் பெற்றுக்கொள்ளவேண்டிய பிரயோஜனங்களை யெல்லாம் இதுகாலைப் பெற்று வாழ்கிருர்களா? என்பதை மட்டும் ஒரு சிறிதே ஆராய்ந்து பார்ப்போம்: இற்றைநாள் நாகரிக முற்போக்குடனே ஒப்புநோக்கி யாராயுமிடத்து, இது பொழுது முஸ்லிம் நாடுகளென அழைக்கப்படும் தேயங்களுள் பெரும்பான்மையன மிக மிகப் பிற்போக்குள்ளனவாகவே யிருந்துவருகின்றன. இந்தப் பிற்போக்கு நிலைமைக்குக் காரணம் இஸ்லாம்தான் என்று அநேக முஸ்லிமல்லாதார்கள், ஏன், ஒருசில முஸ்லிம்களுங்கூட எண்ணத் துணிந்து விட்டார்கள். முஸ்லிம் நாடுகள் இக்காலத்தில் பிற்போக்கு நிலையிலிருப்பதற்குக் காரணம் இஸ்லாமன்று என்பதையும், இஸ்லாம் போதித்துள்ளபடி அவை நடக்கத் தவறிவிட்டதே அதற்குரிய உண்மைக் காரணம் என்பதையும் அக் குணதோஷவாதிகள் கூர்ந்து கவனிப்பது கிடையாது. தன்னுலே தான்கெட்டால், அண்ணுவி என்செய்வான்? முஸ்லிம்கள் உதட்டால் மட்டும் தங்களை “முஸ்லிம்கள்” என்று கூறிக்கொண்டு, உண்மையிலே இஸ்லாம் ஏவிய வண்ணம் ஒழுகாதிருந்தால் இவர்கள் எவ்வாறு முன்னேறுவார்கள்?

வெறுமந்திரத்தால் மட்டும் மாங்காய் விழாதென்பதை இவர்கள் நன்குணர்தல் வேண்டும்*. இற்றைநாள் முஸ்லிம்கள் முயற்சிக்கும், ஊக்கத்துக்கும், அறிவுக்கும், ஆற்றலுக்கும், நாணயத்துக்கும், நல்ல கண்ணிய வாழ்க்கைக்கும், ஒழுக்கத்துக்கும் ஒழுங்கான தானதருமத்துக்கும், சரியான தெய்வ நம்பிக்கைக்கும், நன்னடக்கைக்கும் குர்ஆன் ஷரீபிலிருந்து படிப்பினைபெற மறந்து கிடக்கிருர்கள். கிளிப்பிள்ளைப் பாடமாக அத் திருமறையை “பரக்கத்துக்”காக ஓதுகிருர்கள்; ஆயின், தங்கள் லவ்கிக வைதிக வாழ்க்கைக்கு அத் தெய்வத் திருமறை யாது போதிக்கிறதென அறிய மாட்டார்கள்; அறியவும் முயல மாட்டார்கள். தமக்கென வாழ்வதுடன்கூடப் பிறர்க்குரிய மக்களாக வாழ வேண்டுமென்னும் இஸ்லாத்தின் இனிய போதனையை இவர்கள் அலக்ஷியத்துடனே புறக்கணித்து விட்டார்கள்; இஸ்லாத்தின் சற்போதத்தை ஏனை மக்களுக் கெல்லாம் எடுத்தோத வேண்டுமென்பதையும், எல்லா முஸ்லிம்களையும் முன்னேறுமாறு கைதூக்கி விடவேண்டுமென்பதையும் இக்கால இஸ்லாமியர்கள் புறக்கணித்து மறந்தே விட்டார்கள். இவையெல்லாம் மதக்கடமை யென்பதை இவர்கள் உணர்வது கிடையாது. அப்ஸோஸ்!

“இன்ஸான்—(இம்மானிடன்) தான் முயன்றதையே யன்றி (மேற்கொண்டு ஒன்றையும்) பெற்றுக்கொள்ள மாட்டான்,” என்று எமது திருமறை இயம்பிவிட்டிருக்கிறது (53:39). “முயன்று பாடுபடுகிறவர்கட்கு நாம்—(ஆண்டவன்) நம் பாதையைக் காண்பிக்கிறேம்,” என்பது இனியொரு திருவாக்கியம்.

*முஸ்லீம்களுள் ஒரு சிலரே இஸ்லாத்தில் கூறியவண்ணம் வைதிகத்திலும் லவ்கிக வாழ்க்கையிலும் உள்ளும் புறமும் ஒழுங்குடனே ஒத்து நடந்து வருகின்றனர். வேறு சிலர் வாய்ச் சவடாலாய் இஸ்லாத்தின் பெருமை குறித்துப் பேசிவிட்டு, செயலில் ஒன்றுஞ் செய்யாது சும்மா இருந்து விடுகிருர்கள்; இவர்கள் எவருக்கும் நன்மையும் செய்வதில்லை; தின்மையும் செய்யமாட்டார்கள். இன்னும் பலர் வாயளவிலே சகலவித ஹராமான காரியங்களையும் புரிவார்கள். மேலும் பற்பலர், வாயால்கூட வைதிகம் பேசாமல், தங்கள் அந்தரங்க பகிரங்க வாழ்க்கையிலெல்லாம் அல்லாஹ்ருக்கு மாருகவே நடந்து வருவர். இவர்களே இதுகாலைப் பெரும்பான்மையினரா யிருக்கின்றுர்கள், பா. தா.

இக்கூறிய ஆயாத்களிலிருந்து நாம் ஒருண்மையை உணராதிருப்பது முடியாது; அஃதாவது, இவ்வுலகினில் ஒவ்வொன்றும் சரியான காரணகாரிய நியதிபின்படியேதான் நடைபெற்று வருகிறது என்பதுதானாகும். அஃதாவது, நாம் வினைவிதைத்தால் வினையையே அறுவடை செய்வோம்; தினை விதைத்தால் தினையைத்தான் அறுத்துக் கொள்வோம். எல்லா மனிதர்களுக்கும் இந் நியதி ஒக்கும். ஒருவன் தான் இன்ன மதத்தைப் பின்பற்றி நடக்கிறான், அல்லது அன்ன மதத்தைப் பின்பற்றி ஒழுகுகிறான் என்பதற்காக, அல்லது ஒருவன் இன்ன நிறமுடையவன், அல்லது அன்னநாட்டுக்குரியவன் என்பதற்காக, அவனவனும் தான் தான் இன்னவிதமான பூஜையை அல்லது நமாஸை நடத்துவதாய் வாய்ச்சவடா லடிப்பதற்காக ஆண்டவன் ஒரு சிறிதும் அவனுக்குச் சொந்தச் சலிகை காண்பிக்க மாட்டான். ஆதலால், அவனவன் செய்யும் காரியத்துக்கேற்ற பலாபலனையே அவனவனும் அளவுக்கேற்றவாறு அனுபவித்தே தீர்த்தல் வேண்டுமேயல்லது, அவனவனும் அணியும் சட்டை தொப்பிக்காக, அல்லது வேறு படாடோப விலாசத்துக்காக ஒன்றும் பிரத்தியேக சலிகை காட்டப்பட மாட்டாதென்றறிக. என்னெனின், எல்லா மானிடரும் ஆண்டவனுடைய படைப்பினங்களாக (வேற்றுமையில்லாது) இருந்து வருகின்றனர். "ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்" அன்றோ? எனவே, எவனொருவன் இறைவனுடைய ஏவல்களைக் கடைப்பிடித்து, விலக்கல்களைத் தவிர்த்துக் கொள்கிறானோ, அவனே மாந்தருள் மகாசிலாக்கியமுள்ளவனாயிருக்கிறான்.

## இற்றை நாள் முஸ்லிம்களுக்குரிய பொறுப்பு

எனவே, இக்கால முஸ்லிம்களுக்குரிய பொறுப்பு மகா மகத்தானதாயமைந்து கிடக்கிறது. யான் இதன் கீழே உண்மையை ஒளிக்காது உரைக்கப்போவதைக் கண்டு, எம் வாசக நேயர்கள் என்மீது சீற்றங் கொள்ளவேண்டாம்: அல்லா(ஹ்)வும் அவனுடைய ரசூலும் ஏவியவண்ணம் குர்ஆன் ஷரீபையும் ஹதீது ஷரீபையும் அடியொற்றிப் பின்பற்றி உண்மை முஸ்லிம்களாக ஒழுகாதிருப்பதனால் நாம் மட்டும் பிற்போக்கு வாழ்க்கையிலே சிக்கிச் சுழல்வதுடன் நில்லாது, ஏனை மக்களையும் இஸ்லாத்தின் மேன்மைகளை யறியவொட்டாது தடுத்து நிறுத்தி, அந்தகாரத்தில் அலையவிட்ட பாபத்துக்கும் உரியவர்களாய்விடுகிறோம். ஏனை மதவாதிகள் இஸ்லாத்தின்மீது குரோதங்கொள்ளுமாறே அவ்வம் மதத்துக்குரிய "சுயநலமி"களால் போதிக்கப்பெற்று வந்திருப்பதால், அவர்கள் தாமாகவே குர்ஆன் ஹதீதுகளிலுள்ள சிறப்பியல்புகளை அறிய முயலாதே யிருந்து வருகிறார்கள். எனவே, அவர்களுடைய குரோதகுணத்தைத்திருத்தியமைப்பதெப்படி?

"பத்து மணங்கு உபதேசத்தைவிட ஒரு பலம் அனுஷ்டானமே சாலச் சிறந்தது" என்ப. ஆதலால், நாம் ஒவ்வொரு முஸ்லிமும் "உண்மை முஸ்லிமா" யொழுகி, அல்லா(ஹ்)வும் ரசூலும் ஏவியவண்ணம் மெய்யாகவே (நயவஞ்சகமாயல்ல) நடந்து, லவ்கிகத்திலும் வைதிகத்திலும், அறிவாற்றலிலும் அழகிய சமுதாய வாழ்க்கையிலும் ஒழுங்கான நல்ல நாணயமுள்ள அல்லா(ஹ்)வின் அடியார்களாக வாழ்ந்து, ஏனை மத வாதிகளெல்லாம் இஸ்லாத்தின் சிறப்பையும் சிரேஷ்டத்தையும் சுயமே கண்டுணருமாறு செய்திடுதல் வேண்டும். நம்முடைய ஒழுக்கத்தையும் பழக்கத்தையும் பார்த்தே, "ஆ அதோ இருக்கிறார்கள் உண்மை முஸ்லிம்கள்; இதோ இருக்கிறது மெய்யாய இஸ்லாம்", என்று ஏனைச் சமயவாதிகளெல்லாம் சிலாகித்துக் கூறவேண்டும்.

எனினும், இக்கூறியவாறெல்லாம் செய்யத் துணியு முன்னே, இஸ்லாம் நம்மிடத்திருந்து எதைச் செய்யவேண்டுமென் எதிர்பார்க்கிறதென்று நன்குணர்தல்வேண்டும். இஸ்லாமியனொருவன் முதன் முதலாக அறிந்துணரவேண்டுவது, தனது பவுதிக வாழ்க்கையும் தன் பாரமார்த்திக வாழ்க்கையும் வெவ்வேறாய இரு விஷயங்களா யில்லை என்பதாயேயிருக்கிறது. ஒரு மனிதன் இஸ்லாத்தில் இழைப்பதற்கெல்லாம் ஒரு பாரமார்த்திக நோக்கமே அடிப்படையா யமைந்து கிடக்கிறது. இவன் தன்னுடைய காரியத்தை அல்லா(ஹ்)வுக்காகவும், அடியார்களின் நன்மைக்காகவுமே செய்து முடிக்கவேண்டியவனாயிருக்கிறான்; இஸ்லாத்தில் மன்பதைக்காகச் செய்யப்படும் காரியம் இறைவனுக்காக இழைக்கப்படும் காரியத்தினின்று வேறு பிரிக்கப்பட்டில்லை. ஒரு முஸ்லிமுக்குரிய பக்தியென்பது; ஒரு சன்னியாசியாக அல்லது துறவியாக மாறிப்போய்த் தன் நேரத்தையெல்லாம் தேவப் பிரார்த்தனையிலேயே சதா கழித்து வருவதென்பதிலே பொதிந்து கிடக்கவில்லை. இஸ்லாத்தில் பக்திமான் என்பவன், ஒரு சன்மார்க்க முறையிலே இவ்வுலக வாழ்க்கையை நடாத்திக்கொண்டும், இறைவனுடன் கூட என்றும் நெருங்கிய தொடர்பை ஏற்படுத்திக்கொண்டுமே, எப்பொழுதும் தனக்கென வாழாப் பிறர்க்குரியாளனாய் முற்றமுற்ற உயிர் வாழ்ந்துகொண்டும் இருப்பவனாயே யிருக்கிறான். நீர் ஒரு சுத்த சாதுவாய் உயருமுன்னே மனித சமுதாயத்தில் நீரொரு பிரயோஜனகரமான மனிதனாயிருத்தல்வேண்டும். மஹான் முஹம்மத் (சல்) நபிகட் டிலகத்தின் உயிர் வாழ்க்கை இவ்வுண்மையை மெய்ப்பித்துக் காட்டவல்ல ஒருயிருள்ள உதாரணமாயே யிருந்து வருகிறது.

இப்பொழுது நான் இங்கு, குர்ஆன் ஷரீபின்படி ஒரு முஸ்லிம் என்னென்ன செய்யவேண்டுமென எதிர்பார்க்கப்படுகிறான் என்பதற்குரிய ஒரு சில விஷயங்களை மட்டுமே சுருக்கமாக எடுத்துக்காட்டுகிறேன்.

முஸ்லிமென்பான் சாந்த குணசீலனாயும், அதே சமயத்தில் மனோதிடம் வாய்ந்தவனாயும் இருந்திடல்வேண்டும். மிகமிகக் கடுமையான சோதனையின் வேளைகளிலும் இவன் தன்னுடைய உயரிய ஒழுக்கக் குன்றினின்று ஒரு மயிரிணக்கமும் இழிந்துவிடுவது அறவே கூடாது; ஒவ்வொரு துன்பத்தையும், இறைவன்மீது வைத்துள்ள உறுதியினிமித்தம் அமைதியுடனே பொறுத்துக் கொள்ளவேண்டியவனா யிருக்கிறான். இவ்வாறே, இவனுக்கு வெற்றி கிட்டுங்காலும் இன்னான் அளவிறந்த குதூகலங்கொள்ளாது, ஆண்டவனுக்கு வந்தனை செலுத்தி, அடக்கத்துடனே அகமகிழ்வெய்தல்வேண்டும். இம்முஸ்லிம் ஓரொரு தினமும் மேன்மேலும் உயர்ந்தோங்கவே பாடுபட்டு வரக் கடவன்.

முஸ்லிம் என்பவர் தினமும் ஐங்காலத் தொழுகைகளை நியமமாய்த் தொழுது வருதல் வேண்டும்; ஆண்டவன் அவருக்கு அருளியதினின்று தாராளமாய்த் தான தருமஞ் செய்ய வேண்டியவரா யிருக்கினறார்; அவர் உலோபியா யில்லாமலும், ஊதாரியாய்ப் போய்விடாமலும் நடுமைய மார்க்கத்தையே கடைப்பிடிக்கவே வேண்டியவரா யிருக்கிறார். அவர் தம்முடைய உரிமைகளைத் தமது விருப்பமேபோல் உபயோகித்து வருங்கால், ஏனை மனிதர்களின் உரிமைகளை ஆக்கிரமிப்பது அறவே கூடாது. ஒரு முஸ்லிம் இனியோர் ஆடவர் பெண்டிருக்குரிய இரகசியங்களைத் துருவிக்கொண்டு திரிவதுகூடாது. முஸ்லிம்கள் தங்கள் தீனுலிஸ்லாத்தின் சிறப்பியல்புகளை யெடுத்து ஏனை மக்களுக்கெல்லாம் செவ்வனம் எடுத்து விளக்கலாம்; ஆயின், அவர்கள் வணங்கும் கடவுள்களை இழித்துக் கூறுவது கூடாதாகும். முஸ்லிமென்பார் இரக்க குணமும் மன்னிக்கும் சுபாவமும் உடையவரா யிருத்தல் வேண்டும்; இதனால் இவர் நியாய நடுநிலையை மீறி நடக்க வேண்டுமென்பது அவசியமில்லை.

இக் கூறிய குணாதிசயங்களே, எங்குமுள்ள எந்த ஒரு சமுதாயத்திலும் ஒழுங்குடன் நடக்கவேண்டிய ஒரு பிரயோஜனமுள்ள மனிதனை யுண்டுபண்ணப் போதுமான போதங்களா யிருந்துவருகின்றன; எனினும், இஸ்லாம் ஒரு முஸ்லிமை அவற்றிலும் மேலாய உயர்குணங்களையே அடைந்து கொள்ள வேண்டுமென ஆணையிட்டுள்ளது: எனவே, எல்லா முஸ்லிம்களும் இறைவனுக்குத் தாங்கள் செலுத்த வேண்டிய கடமைகள் என்னவென்றும், ஏனையடியார்கள்மாட்டு இவர்கள் செலுத்த வேண்டிய கடமைகள் என்னவென்றும் செவ்வனம் தெரிந்து நடக்கவேண்டியவர்களா யிருக்கிறார்கள். இக் கடமைகள் இன்னவையென இஸ்லாத்துக்குரிய ஈமான் (மத நம்பிக்கை) ஷாத்துக்களையும், இஸ்லாம் (அனுஷ்டான)கிரியைகளையும் சிறிதே நுணுகியாராய்வோர்கள் கொள்வர்.

ஒரு முஸ்லிம், ஓரே இறைவன் மீதும், அவனுடைய அமரர்கள்மீதும், அவனுடைய வேதங்கள் மீதும், அவனுடைய தூதர் (நபிமார்)கள் மீதும், இறுதித் தீர்ப்புநாள் மீதும் விசுவாசம் கொள்ளவேண்டியவனா யிருக்கிறான். இவ் வம்சங்களைந்தையும் நுணுகியாராயத்துணிவோமாயின் அவைகள் அவனை அன்னவனுக்குரிய இறுதிக் குறிக்கோளவிலே கொண்டுய்க்க வல்லனவா யிருக்குந் தன்மை செவ்வனம் புலப்படக் கிடக்கும். இத்தகைய விசுவாசமில்லாது. ஒரு மானிடனால் இத்தரணி வாழ்க்கையில் குறுக்கிடும் துன்பங்களையும் சங்கடங்களையு மெல்லாம் எதிர்த்து நின்று, இங்கே காணப்படும் தீய சோதனைகளை, அல்லது தீய தூண்டுதல்களை விட்டு அப்பால் கடந்து செல்வது சாலாதாகிவிடும். இவ் வம்சங்களில் நம்பிக்கை கொள்ளாவிடின், இவற்றிலே விசுவாசங் கொண்டு நின்ற பண்டைப் பெரியார்கள் ஏறிய உச்ச நிலையை ஒருகாலும் தாவிப் பிடிப்பது முடியாது. அக்கால நபிமார். அவ்லியாமார் சூபியாக்கள், கலீபாக்கள் ஆதியோரைப் பின்பற்றிப் பெருமை யடைதற்கும் ஈமானுக்குரிய அந்த ஐந்து ஷாத்துக்களிலும் உறுதி பூணுவது அத்தியாவசிம். (தொடரும்)

(8-ஆம் பக்கத் தொடர்)

விஜயஞ்செய்து நிலைமையை நேரிற் கண்டறியவில்லை. அங்கங்கேயுள்ள பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளை அரை நாளுக்கு மட்டுமே பள்ளிகளுக்கு அனுப்பி வைப்பதால், மீதி அரை நாளும் எப்படிப்பட்ட போவதிக்கு உள்ளாகித் தவிக்கின்றன ரென்பதை அவர்கள் உணரவில்லை. அரை நாள் வீதம் இரு தடவை பாடம் நடத்துவதால் மாணவர்களின் எண்ணிக்கை பெருகிவிட்ட தென்பதையோ அல்லது பாடம் கற்பிக்கிற ஆசிரியர்கள் சிரமத்துக்கு உள்ளாகவில்லை என்பதையோ அந்தக் கமிட்டியினர் கொஞ்சமும் நிரூபிக்கவில்லை. ராஜாஜீ மீதுள்ள அபிமானம் காரணமாக அவர்கள் அவருடைய கல்விச் சீர்திருத்தத்தை ஆமோதித்திருப்பதாகத் தோன்றுகிறதேயொழிய, அந்தத் திட்டத்தை அவர்கள் காய்தல் உவத்தலின்றி நடுநிலைமைவகித்துச் செம்மையாக ஆராய்ந்து முடிவு சொன்னதாக எமக்குப் புலனாகவில்லை!

### பாக்கிஸ்தானும் அமெரிக்காவும்

சென்ற மாதம் பாக்கிஸ்தானின் கவர்னர் ஜெனரல் குலாம் முஹம்மத் அமெரிக்க யுனைட்டெட் ஸ்டேட்ஸுக்கு விஜயஞ் செய்து, அந்நாட்டு ஜனாதிபதியாகிய ஐஸன்ஹோவருடன் பேச்சு வார்த்தைகள் நிகழ்த்தினர். பாக்கிஸ்தான் அமெரிக்க ஆயுத உதவியைக் கோருகிறதென்றும், அந்த உதவிக்குப் பிரதியாக, பாக்கிஸ்தானில் அமெரிக்கா யுத்த தளங்களை நிறுவிக்கொள்ளப் பாக்கிஸ்தான் இணக்கம் தெரிவிக்கிற தென்றும் அமெரிக்க பத்திரிகைகளிலும், நம் நாட்டுப் பத்திரிகைகளிலும் பல திறப்பட்ட ஹேஷ்யங்களும் கற்பனைகளும் கயிறுதிரித்து விடப்பட்டன. ஆனால், அவ்விரு நாட்டுத் தலைவர்களும் என்ன பேசிக் கொண்டார்க ளென்பதும், எவ்விதமான உடன்படிக்கைகளை உண்டுபண்ணிக் கொண்டார்க ளென்பதும் இன்னம் அதிகார பூர்வமாக வெளியிடப்படவில்லை. ஆயினும், இந்த டிஸம்பர் பிறந்ததும் பாக்கிஸ்தான் ரேடியோவிலிருந்து ஒலிபரப்பிய ஜனாப் முஹம்மதலீ என்னும் பிரதமர், பாக்கிஸ்தான் தனது சுயேச்சையையும் சுதந்தரத்தையும் அமெரிக்காவுக்கோ அல்லது வேறெந் நாட்டுக்கோ இரையாக்கப் போவதில்லை யென்றும், இதைப்பற்றி விபரீத குதர்க்கங்கள் விளைவதைக் கண்டு அவர் வருந்துகிரு ரென்றும் தெரிவித்தார்.

அமெரிக்காவுடன் பாக்கிஸ்தான் எவ்விதமான நல்ல உடன்படிக்கையைச் செய்துகொண்டபோதினும், அதற்காக எவரும் குறைகூற முடியாது. ஆனால், ருஷ்யாவுக்கும் அமெரிக்காவுக்கு மிடையே பேரதிருப்தியும், குளிர்ந்த யுத்தமும் நிலவிவருகிற இற்றைநாளில் பாக்கிஸ்தான் ருஷ்யாவுக்கு அருகாமையிலுள்ள தன் எல்லைப் புறங்களில் அமெரிக்க ராணுவ தளங்களை அமர்த்திக் கொள்ள இடங்கொடுக்குமேயானல், அதனால் நிச்சயமாக உலக சமாதானம் உருக்குலைந்துவிடக் கூடும். அமெரிக்காவுக்கும் ருஷ்யாவுக்குமிடையே நடைபெற்றுவரும் பூசல்களிலே நம் நாடு எப்படி நடுநிலைமை வகிக்கிறதோ அப்படியே பாக்கிஸ்தானும் நடுநிலைமை வகிப்பதே விவேகமாகும். அதை விடுத்து, அமெரிக்கர்களின் ராணுவங்களுக்கு அந்நாட்டிலே இடங்கொடுப்ப தென்பது ருஷ்யர்களைத் தூண்டிவிட்ட செயலாகப் போய்முடியும்.

ஆனல், அப்படிப்பட்ட தற்கொலைக் கொப்பான ஒப்பந்த மெதையும் அமெரிக்காவுடன் செய்துகொள்ளவில்லையென்று பாக்கிஸ்தான் அரசாங்கம் உறுதி கூறுவதால், நாம் நமது ஹேஷ்யங்களை மட்டுப் படுத்திக்கொண்டு, என்ன நிகழ்கிற தென்பதைப் பொறுத்திருந்து பார்ப்போமாக. பிரிட்டிஷாரின் பிடியினின்று காப்பாற்றி நிலைநாட்டிய ஜின்னாவின் பாக்கிஸ்தானை அந்த ஜின்னாவின் சீடர்கள் அமெரிக்கர்களின் கையிலே பலியிட்டுவிடமாட்டார்க ளென்றே நாம் நம்புகிறோம். உலகோர் உண்மையைச் சரிவர உணர்ந்துகொள்வதற்கு உதவியாக, அமெரிக்காவும் பாக்கிஸ்தானும் என்னவிதமான உடன்படிக்கையைத்தான் செய்துகொண் டிருக்கிருர்களென்னும் விவரத்தை அவ்வரசாங்கம் பகிரங்கப்படுத்தி விடுமேயானல், வீண் சந்தேகங்களும் குழப்பங்களும் விளையமாட்டா; ருஷ்யாவும் பாக்கிஸ்தான்மீது துவேஷங் கொள்வதை நிறுத்திக் கொண்டுவிடும்.





# இஸ்லாமிய ஆட்சியும் சிறுபான்மையினர்களும்

**(சிதம்பரம், குலாம் முஹம்மத் கவுஸ்)**

சில நாட்களாகப் பாக்கிஸ்தான் அரசியலமைப்பைப்பற்றிய விஷயங்கள் நம் நாட்டின் பத்திரிகைகளில் வெளிவந்தவண்ண மிருக்கின்றன. இஸ்லாமிய அரசியல் சட்டத்தைப் பற்றியும் அதனுல் நாளடைவில் ஏற்படக்கூடிய பலாபலன்களைப் பற்றியும் இந்தியாவில் அதனுல் உண்டாகக்கூடிய எதிர்விளைவுகளைப் பற்றியும் பலவாருக நாம் பத்திரிகைகளில் பார்த்து வருகின்றேம். பாக்கிஸ்தானில் நிறைவேற்றி வரப்படும் இஸ்லாமிய சட்டங்களைப்பற்றிய விவரங்கள் யாவை என்பன நமக்கு இன்னும் பூரணமாகத் தெரியவில்லை. அவைகளை உண்மையளவில் அனுஷ்டானத்தில் கொண்டுவர எத்தகைய ஏற்பாடுகள் செய்யப் போகிருர்க ளென்பதையும் நாம் அறியோம். ஆனுல் உலக முஸ்லிம்கள் அனைவரும் இந்திய முஸ்லிம்களும் உறுதியுடன் விசுவாசங் கொண்டுள்ள இஸ்லாத்தைப் பொறுத்த வரையில் அதன் அடிப்படைத் தத்துவங்களையும், சட்ட திட்டங்களையும் நோக்குமிடத்து, அவை மானிட வர்க்கத்தாரின் எந்த வகுப்பினருக்கும் யாதொரு தீங்கும், எவ்வித நஷ்டமும் விளைவிப்பதாக இல்லவே இல்லை.

எனினும், நம் நாட்டின் முஸ்லிம் அல்லாத பத்திராதிபர்களும் நிருபர்களும் இஸ்லாம் அதன் நிர்வாகத்திலிருக்கும் சிறு பான்மையினர்களுக்கு அளிக்கும் உரிமைகளைப் பற்றியும், அது உத்தரவாத மளிக்கும் பாதுகாப்புக்களைப் பற்றியும் அதிகமாகக் குறைகூறி வருவதை நாம் பத்திரிகைகளில் கண்டே வருகின்றேம்.

அவர்கள் ஏன் அங்ஙனம் குறை கூறுகிருர்களென்பதைக் கவனிக்கும்பொழுது இஸ்லாம் தன் நிர்வாகத்தில் சிறுபான்மையினருக்குப் பிரதான உத்தியோகங்களை (Key Positions) அளிக்க முன் வராமையே முக்கிய காரணமாகத் தோன்றுகிறது. எந்த நிர்வாக அமைப்பில் சிறுபான்மையினருக்குப் பிரதான உத்தியோகப் பொறுப்புக்கள் (Key Positions) அளிக்கப்பட மாட்டாதோ அத்தகைய நிர்வாக முறை சிறுபான்மையினருக்கு என்ன பிரயோஜனத்தை அளிக்கக்கூடும் என்பதே அவர்களின் வாதம். அவர்கள் இவ்வாறு ஐயுறுவது இயற்கையே.

ஆனுல், இந்த முடிவுக்கு வருவதற்குமுன் ஒரு முக்கிய விஷயத்தைப்பற்றி ஆராய வேண்டியிருக்கிறது. இஸ்லாம் உலகத்திலுள்ள மானிட கோடியையே ரக்ஷிக்கக் கூடியதென்று பறை சாற்றிக்கொண் டிருக்கும் போது, சிறுபான்மையினர்களுக்கு முக்கிய உத்தியோகங்களை ஏன் அளிப்பதில்லை என்பதை ஆராய வேண்டி யிருக்கிறது. உண்மையை ஆழ்ந்து கவனிக்குங்கால், மதச் சார்பற்ற ஒரு ஜனநாயக ஆட்சி தன் நிர்வாகத்தின்கீழ் இருந்துவரும் சிறுபான்மையினர்களை எந்த நோக்கத்துடன் பார்க்கின்றதோ, அவ்வித நோக்கத்துடன் ஓர் இஸ்லாமிய ஆட்சி தன் நிர்வாகத்திலிருக்கும் சிறுபான்மையினர்களை ஒருபோதும் பார்க்கிறதில்லை. இஸ்லாம் தன் நிர்வாகத்தில் இருக்கும் பிரஜைகளை இரண்டு பிரிவினர்களாகத்தான் வகுக்கின்றது. அவ்வாட்சியின் நோக்கங்களையும் லட்சியங்களையும் பரிபூரணமாக ஒப்புக்கொண்டு அதன்மீது அசையா விசுவாசம் கொண்டவர்கள் ஒரு பிரிவினர். இதற்கு மாருக அந்த லட்சியங்களின்மீது விசுவாசங் கொள்ளாதவர்கள் இரண்டாவது பிரிவினர். இவர்கள் இஸ்லாமிய அரசாங்கத்தைப் பூகோள ரீதியில் அமைக்கப் பெற்றிருக்கும் ஓர் ஆதிக்கம் என்ற முறையில் மட்டுமே ஒப்புக்கொண்டிருப்பார்கள். இவ்வாறு பிரஜைகளை இரு வகையாகப் பிரித்தபின் தேச நிர்வாகத்தை ஏற்று அதன் திட்டங்களை அமல் நடத்தும் முழுப் பொறுப்பையும் அவ்விலட்சியங்களை ஒப்புக்கொண்டு பூரண விசுவாசங் கொண்டுள்ள முதற் பிரிவினர்மீது சுமத்தி விடுகின்றது. அதன்மீது விசுவாசங் கொள்ளாதவர்களை அப்பொறுப்பினின்றும் விலக்குகின்றது. இஸ்லாம் இவ்வாறு ஏன் செய்கிறது என்றல், அதனுல் நிலைநாட்டப்படும் அரசியல் நிர்வாகம் ஒரு லட்சியத்தின்மீது நிர்மாணிக்கப்பட்ட நிர்வாகமாக இருக்கிறது. ஒரு லட்சியத்தையும் அடிப்படையையும் கொண்ட நிர்வாகத்தை அந்த லட்சியத்தையும் அடிப்படையையும் ஒப்புக்கொண்டு அதன் பேரில் பூரண விசுவாசமும் கொண்டவர்கள்தான் நடத்த வேண்டுமென்பது வெளிப்படை. தவிர அத்தகையாரால்தான் அந்த நிர்வாகத்தைச் சீருற நடத்த முடியுமென்பதும் மறுக்க முடியாத உண்மை. அவர்களுடைய வாழ்க்

கையின் நோக்கமும் அந்த நிர்வாக அமைப்பிற்கு ஒத்ததாய் இருக்கவேண்டும். அதனுடைய நோக்கத்தின்மீதும், குறிக்கோள்மீதும், விசுவாசமும் நம்பிக்கையும் இல்லாதவர்களைக் கொண்டு அந்த நிர்வாகத்தை நடத்துவதை இஸ்லாம் பெருந்தவறுகக் கருதுகிறது. ஏனெனில், இவ்வித லட்சிய நிர்வாகத்தை இவர்களால் சரிவர நிர்வகிக்கவும் முடியாது. ஒருகால் நிர்வகித்தாலும்கூட அதனல் எவ்விதப் பிரயோஜனத்தையும் சாதிக்க முடியாதென்பதும் உறுதி. இவ்வாருகவே தற்கால அரசியல் கட்சிகள் யாவும் செய்து வருகின்றன. உதாரணமாக, ருஷ்யாவில் ஆட்சிப் பீடத்தில் இருக்கும் கம்யூனிஸ்ட் கட்சி, நிர்வாகத்தை நடத்தும் பொறுப்பைக் கம்யூனிஸ்ட் அல்லாதார்க் களிப்பதில்லை.

இனி, இஸ்லாம் தன் நிர்வாகத்திற்குட்பட்ட பிரதேசத்தில் இருக்கும், தன்னை மனப்பூர்வமாக ஒப்புக்கொள்ளாத, தன்மீது விசுவாசம் கொள்ளாதவர்களுமான சிறுபான்மையினர்களை நடத்தும் விதத்தைப் பற்றிக் கவனிப்போம். அவர்களுக்கு இஸ்லாம் பிரத்தியேக சலிகைகள், பாதுகாப்புக்கள், உரிமைகள் முதலியவற்றை ஏராளமாக வழங்குகிறது. இஸ்லாத்திற்குத் தன் லட்சியத்தின் பேரில் இருக்கும் அசைக்க முடியாத திடநம்பிக்கைக்கும், உறுதிக்கும், விசால மனப்பான்மைக்கும் இத்தகைய பாதுகாப்புக்களும் உரிமைகளும் சலிகைகளும் தாமே தம் உதாரணங்களாக விளங்குகின்றன. இஸ்லாம் தன்னை ஒப்புக் கொள்ளாதவர்களைக் கொண்டு தன்னுடைய லட்சிய நிர்வாகத்தின் வண்டியை எப்பொழுது இழுக்கச் சம்மதிக்கின்றதில்லையோ அதே சமயத்தில் அது முஸ்லிம் அல்லாதவர்களை (சிறுபான்மையினரை) இஸ்லாமிய கலாசார,சமுதாய, நாகரிக, நடை உடை பாவனைகளையும் ஏனை இஸ்லாமிய அடிப்படைகளையும் ஒப்புக் கொள்ளும்படி நிர்ப்பந்தப்படுத்துவதும் கிடையாது இஃதன்னியில் அந்த நிர்வாகத்திற்குட்பட்டிருக்கும் சிறுபான்மையினர் தாழ்வு மனப்பான்மை என்கிற முறையில் ஆதிக்கம் செலுத்துபவர்களாகிய முஸ்லிம்களைத் திருப்தி செய்ய வேண்டுமென்ற எண்ணத்தைக் கொண்டு கூட அவைகளை அனுசரித்துக் கொள்ளாதிருக்கும்படி இஸ்லாம் கண்டிக்கிறது. இவ்வாறு சிறுபான்மையினரின் தனிப்பட்ட நாகரிகம், கலாசாரம், சமுதாயப் பண்பாடுகள், ஆகியவை யாவும் ஓங்கி வளர வசதி இருக்குமே தவிர அவை க்ஷீணித்துப் போகாமல் இருப்பது திண்ணம். இம் முறையில் இஸ்லாம் தன் சிறுபான்மையினரின் நாகரிக, கலாசார, சமுதாயப் பண்பாடுகளுக்குக் காப்பாளராக இருந்து வருமேயன்றி, சிறுபான்மையிரின் நாகரிக கலாசாரங்கள் பெரும்பான்மையினரின் நாகரிக கலாசாரத்தில் கலந்து கரைந்துவிட ஒருபோதும் அனுமதிக்காது. இவ்வாறு செய்வது அதன் அடிப்படை லட்சியத்திற்கே முரண்பட்டதாகும். மேலும் முஸ்லிம் அல்லாதவர்களை (சிறுபான்மையினரை)த் தங்களுடைய லட்சியங்கள், சமுதாயப் பண்பாடுகள், பாஷை, சரித்திர வரலாறுகளின்பேரில் தங்கள் தனிப்பட்ட சமுதாயத்தை அது அமைத்துக்கொள்ள பூரண சுதந்திரம் அளிக்கின்றது. இவை மட்டிலும் அல்ல; இந்த நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்ளத் தங்களுடைய தனிப்பட்ட சட்ட சபைகள் அமைத்துக் கொள்ளவும், இயற்றப்பட்ட சட்டங்களை அமல் நடத்தவும், அவைகளின் பிரகாரம் நியாய மன்றங்கள் அமைத்துக்கொள்ளவும், அவைகளில் தங்களுடைய விவகாரங்களை விசாரித்து முடிவு செய்து கொள்ளத்தக்க அளவுக்கு வசதியும் சுதந்தரமும் அளிக்கின்றது. மேலும் தங்களுடைய கோட்பாடுகளையும், சித்தாந்தங்களையும் சாத்வீக முறையிலும், நாகரிக முறையிலும் பரப்புவதற்கும், பிரசாரம் செய்வதற்கும், சுதந்திரம் அளிக்கின்றது. தன் ஆதிக்கத்திலிருக்கும் சிறுபான்மையினருக்கு இஸ்லாம் அளிக்கும் உரிமைகளும் சலிகைகளும் எந்த எல்லையை அடைந்து விடுகின்றன வென்பதைப் பார்க்கும்பொழுது, தற்கால அரசியல் பாஷையில் ஒரு நிர்வாகத்தில் நிர்வாகம் (State within a State) அமைத்துக்கொள்ள இஸ்லாம், முஸ்லிம் அல்லாதவர்களுக்கு (சிறுபான்மையினருக்கு) வசதி அளிக்கின்றது.

வட்டி லேவாதேவி, விபசாரம், தொழில், போன்ற பொதுமக்களின் ஒழுக்க முறைகளில் கெடுதல் விளைவிக்கக்கூடிய அடிப்படை விஷயங்களைத் தவிர மற்ற எந்த விஷயத்திலும் இஸ்லாம் தலையிடத் தயாராய் இல்லை. இதுதான் **ஒரு தேசத்தின் அரசியல் மதம் இஸ்லாம் என்று சொல்வதன் கருத்து.**

இவ்வித விசால மனப்பான்மையுடனும் திருப்திகரமான முறையிலும் சிறுபான்மையினர்களின் பிரச்னையை உலகிலுள்ள வேறெந்த அரசியல் திட்டம் தீர்த்து வைக்கின்றது என்று சற்று யோசித்துப் பாருங்கள். உலகத்திலுள்ள மதச் சார்பற்ற அரசியல் திட்டங்கள் தத்தம் சிறுபான்மையினர்களுக்கு ஏட்டளவில் மட்டும் பல உரிமைகளும் சலிகைகளும் கொடுத்து விடுகின்றன.



ஆனுல், செயல் முறையில் அவர்களை நாலா பக்கங்களிலும் வளைத்து, அவர்கள் தங்கள் தனிப்பட்ட நாகரிகம், கலாசாரம், ஒழுக்க முறைகளை விட்டு விலகி, பெரும்பான்மையினருடன் கலந்து கவர்ந்துவிடக்கூடிய அளவுக்குச் செய்து விடுகின்றன. இதற்கு நேர்மாருக இஸ்லாம் தன் சிறுபான்மையினரைத் தன்னுடன் கலந்து கரைத்துக்கொள்ள முயற்சிக் கிறதில்லை என்று சரித்திரமே சாட்சி பகர்கின்றது. தெளிவாகச் சொல்லுவோமேயாயின், இஸ்லாத்தின் லட்சியம், அது தன்னை ஏனையோர் முன்னிலையில் பகிரங்கமான முறையில் சமர்ப்பிக்கின்றது. இறைவன்மீதும் அவனுடைய தீர்க்கதரிசியின் மீதும் விசுவாசம் கொள்ள அது அழைப்பு விடுக்கின்றது. எவர்கள் அந்த அழைப்பின்மீது விசுவாசம் கொள்கிருர்களோ, அவர்களை அதனுடைய சட்ட திட்டங்களுக்கு அடிபணியுமாறு கட்டளையிடுகின்றதே யொழிய, விசுவாசங் கொள்ளாதவர்களைத் தன்னுடைய சட்டதிட்டங்களுக்கு அடிபணியுமாறு எவ்விதத்திலும் நிர்ப்பந்தம் செய்கின்ற தில்லை.

துரதிருஷ்டவசமாக இந்திய முஸ்லிம்களின் முந்திய சில காரியங்கள் இஸ்லாத்துக்கு முரணுக இருந்தமையாலும் தற்போதைய இந்தியா-பாக்கிஸ்தான் உறவின் சூழ்நிலையிலும் இஸ்லாத்தைப் பார்க்க முயலுகின்றார்கள். இவ்விஷயங்கள்தாம் நம்முடைய ஹிந்து சகோதரர்களின் தப்பான அபிப்பிராயங்களுக்கு அஸ்திவாரமாக அமைந்துள்ளன. ஆனுல், இடையிலுள்ள இவ் விஷயங்களை அகற்றிவிட்டால், ஓர் அறிவுள்ள ஹிந்துவும் கூட இஸ்லாம் மனிதர்களுக்குக் கேடு விளைவிக்கக் கூடியதென்று சொல்லிவிட முடியாது என்பதே உமது உறுதி. அவர்கள் அதை ஒப்புக் கொள்ளாமல் இருப்பது வேறு விஷயம். ஆனுல் உலகத்திலுள்ள கோடிக்கணக்கான முஸ்லிம்கள் விசுவாசங்கொண்டுள்ள வாழ்க்கையின் திட்டமாகிய இஸ்லாம், மனிதர்கள் வாசஞ் செய்யும் தேசங்களுக்கன்றி மரஞ் செடிகள், காட்டு மிருகங்கள் வசிக்கும் வனந்தரக் காடுகளுக்குத்தான் தகுந்தது என்று சொல்லிவிட முடியாது. இஸ்லாம் மனிதர்களுக்கு அன்பும் அருளும் அடங்கிய செய்தியல்லாமல் பாழ்படுத்தக் கூடிய சட்டம் என்று சொல்லிவிட ஒருவரும் துணியார். இவ் விஷயங்கள் யாவும் வெறும் தப்பபிப்பிராயத்தின்மீது மட்டும்தான் சொல்ல முடியுமென்பது விளங்கக் கிடக்கின்றது.

(டில்லி "தஅவத்" என்னும் உர்து சஞ்சிகையைத் தழுவியது.)

(3-ஆம் பக்கத் தொடர்)

*ஓர் அரசியல் கட்சியைச் சேர்ந்த எந்தத் தினசரிப் பத்திரிகையும் ஒவ்வொரு வாரத்திலும் ஆறு முறை வெளிவர வேண்டுமென்றும், ஒவ்வொரு பத்திரிகையும் குறைந்த பக்ஷம் ஆறு பக்கங்களில் அச்சிடப்படல் வேண்டுமென்றும் அந்தச் சட்டம் வன்மையாகக் கூறுகிறது. திமஷ்க் நகரில் அச்சிடப்படும் ஒவ்வொரு பத்திரிகையும் 2000 பிரதிகளுக்குக்குறையாமலும், ஹலப் (அலெப்போ) நகரில் அச்சிடப்படும்ஒவ்வொருபத்திரிகையும் 1500 பிரதிகளுக்குக் குறையாமலும் வெளிவரவேண்டும். இதைவிடக் குறைவான அளவில் செலாவணியாகும் பத்திரிகைகளை யாரும் அச்சிட முடியாது. ஒவ்வொரு பத்திரிகை ஆபீஸிலுமுள்ள பிரதம ஆசிரியர்க்கு உதவியாக மற்றும் மூன்று ஆசிரியர்கள் அமர்த்தப்படவேண்டும்; அந்தப் பத்திரிகைக்காக ஒரு பிரத்தியேக நிருபரும் இருத்தல் அவசியம். அதிகாரபூர்வமான உடன்படிக்கையைச் செய்துகொண்டு, ஒவ்வொரு தினசரிப் பத்திரிகையும் குறைந்தபக்ஷம் இரண்டு உலகச் செய்தி ஸ்தாபனங்களிலிருந்தாவது செய்திகளைப் பெறவேண்டும்.*

*செய்தி ஸ்தாபனங்கள் எவ்வெவ் நிபந்தனைகளுக்குக் கட்டுப்பட்டு, எத்தனை நிருபர்களை அமர்த்திக்கொண்டு இயங்கவேண்டுமென்னும் ஷரத்துக்களை அடக்கி அந் நாட்டுக் குடியரசு இனிமேல் சட்ட மியற்றும். அச்சட்டத்துக்கு முற்றிலும் கட்டுப்பட்டே அந்தச் செய்தி ஸ்தாபனங்கள் நிர்மாணம் பெறும். தினசரிப் பத்திரிகை யாபீஸ்களிலுள்ளதைப் போலவே ஒவ்வொரு செய்தி ஸ்தாபன ஆபீஸிலும் ஒரு ஜவாப்தாரியான மானேஜரும், ஒரு பிரதம ஆசிரியரும் இருக்க வேண்டும். வெளிநாட்டுச் செய்தி ஸ்தாபனம் ஏதாவது ஸிரியா நாட்டில் ஒரு கிளை ஆபீஸ் வைத்துக்கொள்ள நாடினால், பிரசார-செய்தி இலாகாவின் டைரெக்டர் ஜெனரலுடனே ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டே ஆரம்பிக்கவேண்டும். அந்தக் கிளை ஸ்தாபனத்தில் பொறுப்பு வாய்ந்த மானேஜராக அங்கம் வகிப்பவர் ஒரு ஸிரிய பிரஜையாகவும், பத்திரிகை நடத்துவதையே தொழிலாகக் கொண்டவராகவும் இருத்தல் வேண்டும். அவருக்கு வேறெந்த ஜோலியும் இருக்கக்கூடாது; அவர் இந்த ஸ்தாபனத்திலேயே முழு நேரமும் வேலை செய்பவராய் விளங்கவேண்டும.*

—'ஹிந்து'

# பட்டம் பெற்ற பக்கீர்

அந்தப் பெண்மணியின் கண்களிலே களிப்பு மிக்க மகிழ்ச்சிக் குறி ஒளி வீசிக் கொண்டிருந்தது—அவள் மட்டற்ற ஆனந்தத்திலே மிதந்துகொண்டிருந்தாள். அவளுடைய வதன கமலத்திலே அன்பும் அபிமானமும் ததும்பி வழிந்தன. அவள் நீண்ட நாட்களாக அதி யாவலுடனும் ஆசையுடனும் எதிர் பார்த்துக் காத்துக் கிடந்த அந்த நாளும், அந்த மணியும், அந்த நிமிஷமும் இப்போது வந்து விட்டன. இந்த நேரத்தை யடைவதற்காக அவள் வருஷக் கணக்கில் காத்துக் கொண்டும் கவனித்துக்கொண்டுமிருந்தாள். அவள் வருஷக் கணக்காக உழைத்துக் கொண்டும், சுக வாழ்க்கை வாழ வேண்டும் என்னும் அபிலாஷையை அடியுடன் அடக்கிக் கொண்டும், இயற்கையாக உள்ளத்துள் எழக்கூடிய அவாவையும் ஆவலையும் அமுத்திக் கொண்டும், தன்னாலான தியாகமெல்லாம் புரிந்து சமயத்தில் தான் உண்ணும் உணவைக்கூட மிச்சம் பிடித்து, சிறுகச் சிறுகப் பணம் சேர்த்து வெகு தூரத்திலுள்ள நகரமொன்றில் கல்லூரியில் பயிலும் தன் மைந்தனின்படிப்புச் செலவுக்கு அனுப்பி வந்தாள்.

இன்றைக்குத்தான் அந்தக் களிப்பூட்டும் சுப செய்தி வந்து சேர்ந்தது. ஆம்! இன்று அவளைக் காண்பவ ரனைவரும் பொறாமைப் படத்தக்க விதத்திலேதான் அவள் பெருமித முற்றுக் காணப்பட்டாள். இனிமேல் அவள் நெற்றி வேர்வை நிலத்தில் சிந்தப் பாடுபட்டு உழைக்க வேண்டிய அவசிய மில்லை; அவள் இனிமேல் தன் வாழ் நாளைப் போராடிக் கழிக்க வேண்டிய தில்லை; அவள் இனியும் தியாகம் புரிந்து ஏழ்மையுற அவசிய மில்லை. இன்று முதல் அவள் ஓர் அரசியைப் போன்ற உல்லாச சுக வாழ்வை மேற்கொண்டு விடலாம். அவளுடைய வாழ்நாளின் மீதிப் பகுதியை அவள் எல்லையற்ற களிப்பு மிக்க சந்தோஷ நாட்களாகக் கழிக்க முடியும். அவளுடைய மைந்தன் மிக உயர்ந்த பரீட்சையிலே சிறப்பான முறையில் தேறிவிட்டான். பல்கலைக் கழகம் இன்று அவனுக்கு எம். ஏ. பட்டம் வழங்கிவிட்டது.

அவள் தனது இருளடைந்த சிறு குடிலின் தெருவாயி லருகே நின்றுகொண்டிருந்தாள்;—அவளுடைய அருமை மைந்தனின் நல்வரவை எதிர் நோக்கிக் காத்துக் காத்து நின்றுகொண்டிருந்தாள். வெளியிலே காலடிச் சப்தம் கேட்டது. ஆம், அந்தக் காலடிச் சப்தம் அவனுடைய நடையா லெழும் ஒலியேதான்! அவள் வெளியே ஓடினாள், நடுத்தெருவில் வந்து பூரிப்புடன் நின்றாள்; அவனைக் கட்டித் தழுவி உவகைக் கண்ணீருகுத்தாள்; அவனை மார்புற அணைத்துக் கலக்கம் தெளிந்தாள். அளவற்ற அன்புடனும் பெருமித மிக்க பூரிப்புடனும் அவனை அரவணைத்த படியே வீட்டுக்குள் வந்து நுழைந்தாள்.

வீட்டிற்குள் வந்து சிறிது நேரம் சென்றது. “மைந்தனே! இனி நீ என்ன விதமான வாழ்க்கையை நடத்தத் திட்டமிட்டிருக்கிறாய்? நீ என்ன உத்தியோகத்தைத் தேர்ந்தெடுக்கிறாய்?” என்று அன்பும் ஆசையும் பொங்கப் பொங்க ஆவலுடன் வினவினாள்.

அவன் மௌனமாய் நின்றான்.

“என்ன, நீ ஒரு திட்டமும் வகுத்துக் கொள்ளவில்லையா? உன் எதிர்கால வாழ்க்கைக்கு என்ன உத்தியோகத்தைச் சம்பதிக்கலா மென்பதை நீ இன்னம் வகுத்துக் கொள்ளவில்லையா? எம். ஏ. பட்டம் பெற்ற உனக்குத் தகுதியான வாழ்க்கைப் பாதையை நீ இன்னம் கண்டு பிடிக்கவில்லையா?” என்று அவள் மேலும் ஆவலுடனே வினவினாள்.

அவன் இறுதியாக வாய் திறந்தான் :— “ஆம், என்னருமைத் தாயே! நான் என் வாழ்க்கைப் பாதையைத் தேர்ந்தெடுத்து விட்டேன்.”

“மகனே! என்ன தேர்ந்தெடுத்தாய்? கலெக்டர் ஆவதற்குண்டான வழியையா? அல்லது அதனினும் அதிக சம்பளம் கிடைக்கும் இன்னம் உயரிய பதவியையா?”

“அன்னையே! நான் ஒரு சாதாரண எளிய (f)பக்கீராக — இறைவனின் எளிய அடியானாக வாழப்போகிறேன்.......”

இதைச் செவியேற்ற அவள் இடிந்து போனாள்; பித்துப் பிடித்தவளேபோல் திருதிரு வென்று விழித்தாள்! அவளுடைய சிறிய தலைமீது நூற்றுக் கணக்கான இடிகள் ஏக காலத்தில் விழுந்தது போன்ற உணர்ச்சி அவளுக்கு ஏற்பட்டது. அவன் என்ன சொன்னான்? — ஒரு (f)பக்கீர்! (f)பக்கீர்! அவன் சொன்னதை அவள் சரியாகத்தானே கேட்டாள்? இறைவனின் எளிய அடியான்! அவளுடைய நீண்டகால நம்பிக்கையும் ஆசையும் இப்படிச் சுக்கு நூறுகச் சிதறுண்டு போகக்கூடிய இந்தப் பொல்லாத வேளைக்காகவா அவள் இத்தனை நாட்களாக இப்படியெல்லாம் காத்துக் காத்துக் கிடந்தாள்! மிகவும் உன்னதமான உயர் ரக உத்தியோகத்தைச் சுலபமாகப் பெறத்தக்க அளவுக்குக் கல்வி கற்றுத் தேர்ந்துள்ள தன் மகன் கேவலம் ஒரு (f)பக்கீராக இழியவேண்டு மென்பதற்காகவா அவள் இத்தனை நாட்களாகத் தன் ஆயுளெல்லாம் அவதிப்பட்டும், அவஸ்தையுற்றும், அரைப்பட்டினி கிடந்தும் அவதியுற்று வந்தாள்?

பல வருடங்களாக அவள் அரும்பாடுபட்டிருக்கிறாள். பல ஆண்டுகள் தொடர்ச்சியாக அவள் வாழ்க்கைப்போராட்டத்தை வேர்வை சிந்தி நடத்தியிருக்கிறாள். அவளோ நேர்மையான குணம்படைத்த செல்வந்தர்களான பெற்றோருக்கு மகளாய்ப் பிறந்திருந்தாள். அவள் மணந்திருந்த கணவரோ இன்னம் மேலான நேர்மைக்குணமும், செல்வப் பெருக்கமும் படைக்கப்பெற்றவரா யிருந்ததுடன், அரசாங்க கஜானாவில் தலைமை உத்தியோகம் வகித்தவராகவும் விளங்கி வந்தார். அப்படிப்பட்ட அவள் இப்படிப்பட்ட கீழான ஸ்திதிக்கு வரும் அபாக்கியத்தைப் பெற்றிருந்தாள். கையிலுள்ள பணம் தானாகவே கரைந்து வந்தது. அக் குடும்பத்திலிருந்த பணமெல்லாம் தண்ணீ ரொழுகுவதைப் போல் ஒழுகிவிட்டது. எனவே, அக் குடும்பத்தின் தந்தை காலஞ்சென்றதும், அவர் மனைவி விதவையானதுடனே நான்கு குழந்தைகளைப் போஷித்து வளர்க்கவேண்டிய பொறுப்பை ஏற்று முற்கூறிய அத்தனை தியாகங்களையும் புரியவேண்டி யிருந்தது.

அவள் தனக்கேற்பட்ட சோதனைகளுக்குத் தலை வணங்கினாள். தன்னாலியன்ற அளவெல்லாம் அரும்பாடு பட்டுத் தன் குழந்தைகளைக் காப்பாற்றினாள். அவளுடைய காலஞ்சென்ற கணவர் தமது பெருமகிழ்ச்சியின் பிரதிபிம்பமாக விட்டுச்சென்ற ஞாபகார்த்த சின்னங்களல்லவோ அவர்கள்? எனவே, அவள் தன் குழந்தைகளின் சுகதுக்கங்களில் முழுதும் மூழ்கி அவர்களைக் கடைத்தேற்றவே உயிருட னிருந்து வந்தாள். அவளுக்கென்று ஒன்றும் தேவைப்படவில்லை; அவளுடைய சுகத்துக்கென்று ஒன்றும் எஞ்சி நிற்கவில்லை. அவளுக்காக மட்டுமே அவள் உயிர் வாழ்ந்து வந்தாள். அக் குழந்தைகள் அவர்களுடைய தந்தையைப்போலவும், பாட்டனைப்போலவும் பணக்காரர்களாக உயர்ந்து பெருமிதமான தன்மையை அடைவார்களென்று அவள் எதிர்பார்த் திருந்தாள்.

அவள் சுமக்க முடியாத அளவில் கடன் வாங்கி யிருந்தாள். எவ்வெப்போது, எங்கெங்கே அவளால் கைந்நீட்டிக் கடன் வாங்க முடியுமோ அவ்வப்போதும், அங்கங்கேயும் தன்னால் முடிந்த அளவுக்குப் பணம் வாங்கி யிருந்தாள். அவளுடைய வரவு செலவுக் கணக்கை நம்பிக்கையைக் கொண்டும், எதிர் பார்த்தலைக் கொண்டும், தளராத ஊக்கத்தைக் கொண்டும், இறைவனின்மீது வைத்த விசுவாசத்தைக் கொண்டுமே சமன் செய்து வந்தாள். அவள் மிகுந்த நம்பிக்கை கொண்டவளாகவும், அதிக தைரியங்கொண்டவளாகவுமே திகழ்ந்து வந்தாள். காலஞ் செல்லச் செல்ல எல்லாம் சரியாகிவிடுமென்றே அவள் பூரணமாக நம்பியிருந்தாள். அப்படிப்பட்ட அவளுடைய நெடுநாளைய நம்பிக்கை இப்போது வெறுங் கேலிக்கூத்தாக இறுதியில் வந்து விடிந்தது. ஏ கடவுளே! அவள் ஏன் இன்னம் உயிர் வாழவேண்டும்?...... கண்ணீர்த்துளிகள் அவள் கன்னங்களிலே அருவியாய் வழிந்தோடின.

“அம்மா! ஏன் அழுகிறீர்கள்?”

அவள் மௌனஞ் சாதித்தாள்.

அவன் அவளருகிற் சென்றான். அவளுடைய தோள்மீது தன் அன்பு ததும்பும் மெல்லிய கரங்களைப் பாசத்துடன் வைத்துத் தழுவினான்.

“அன்புமிக்க அன்னையே! ஏன் அழுகிறீர்கள்?”

இப்போது அவள் விம்மி விம்மி யழுது அலறினாள்.

“என் மகனே! இந்த உலகத்துக்குள்ளே நுழைந்துபார். நீ எப்படியாவது பெரியபணக்காரனாக உயரும் மார்க்கத்தைத் தேடு. உன்

கல்வித் திறமையைப் பயன்படுத்தி எப்படி யாவது நிரம்பப் பொருளீட்டிக் கொண்டுவா; ஓடு, ஓடு! நான் ஏராளமான கடனை உன் பொருட்டாகச் சுமந்து நிற்கிறேன். அந்தக் கடன்களை நான் திருப்பிக் கொடுக்க எனக்கு ஒத்தாசை செய்...''

அவன் அதற்குமேல் ஒன்றும் செவிமடுக்க வில்லை. இதுவரை அவன் தானொரு முழுச் சுயேச்சை வாய்ந்த சுதந்தர புருஷனென்றும், தன் இஷ்டப்படி எதையும் செய்யமுடியுமென் றும் எண்ணியிருந்தான். அவன் பள்ளியில் பயிலுகின்ற காலத்தில் இரவு நேரங்களில் பாடம் படிப்பான். நள்ளிரவு வேளையிலே ஜன் னலிடுக்கு வழியே கண் சிமிட்டும் விண்மீன் களை உற்று நோக்குவான். அனேக சமயங் களில் அவன் சிந்து நதியின் தீரத்திலே அமர்ந்து கொண்டு வானம்பாடிப் புள்களின் இனிய கீதங்களைத் தெவிட்டத் தெவிட்ட நுகர்ந்து அனுபவிப்பான். விண்மீன்களும், குயிலோசைகளும், சிந்து நதியின் வற்றாத நீர்ப்பெருக்கமும் அவன் உள்ளத்தில் எவ்வ ளவு குழைவை உண்டுபண்ணி விட்டனவென் ருல், எல்லாச் சூரியன்களை விட, எல்லா நக்ஷத்திரங்களை விட, எல்லாக் குயில்களின் இனிய கீதங்களைவிட ஒரே இணையற்றபெருஞ் சோதிச் சுடராக நின்று நிலவும் அந்த ஏகனு கிய இறைவனின் அடிகளிலே சரண் புகுந்து தன் வாழ்வை அர்ப்பணஞ் செய்து விடுவதே இனிய மார்க்க மென்பதை அவன் கண்டு கொண்டான். எனவே, ஆதியும் அந்தமு மாகிய அவனுக்கு அடிமுடி சாய்த்து ஒன் றித்து லயித்துவிடுவது தான் பேரின்ப மென்று அம் மாணவன் முடிவு செய்திருந் தான்.

ஆனல், இப்படிப்பட்ட பேரின்பத்தைத் தான் மட்டும் நுகர்வதற்காகத் தன் தாயா ரைத் துன்புறுத்தலாமா? அவள் அவனுக் காகவே எல்லாத் தியாகங்களும் புரிந்து வேர்வை சிந்திப் பாடுபட் டிருக்கவில்லையா? அவள் ஒரு குற்றமும் புரியவில்லையே! சை, அவள் இனியும் உபத்திரவ முறுவது தகாது. அவளை மகிழ்வுறச் செய்யக்கூடிய சக்தி அவ னிடம் மட்டுமே இருக்கிறது. எனவே, அவன் தன் தாயாரின் கரங்களை இறுகப் பற்றினன். ''கவலையை விட்டொழியுங்கள், தாயே! நான் எப்படியோ உலகத்துக்குச் சென்று பணக் காரஞகை ஆவதற்கு முயற்சி செய்கிறேன்!'' என்று வாக்குறுதி யளித்தான்.

—Mira (East & West)

[அறிஞர் T. L. வஸ்வானீ என்னும் பெரி யாரைப் பற்றிய விருத்தாந்தம் இது. அவர் வாலிபரா யிருந்த காலத்திலேயே பாரமார்த்தி கத் துறையில் திரும்பிவிட்டமையால், உல கப் பொருளுக்கோ, உலகப் பதவிக்கோ அவர் கிஞ்சித்தும் ஆசை வைக்கவே இல்லை. எம். ஏ. பட்டம் பெற்ற வெறும் பக்கிரோகவே அவர் விளங்க ஆசைப்பட்டார். எனினும், மேலே வருணித்த இன்னல்களுக்கு இலக்கா கிக் கிடந்த தாயாரைத் தேற்றுவதற்காகவே அவர் பொருளீட்டத் தொடங்கினர். அதுவும் ஆசிரியராகப் பதவி யேற்றே சம்பாதித்தார். அந்த அறிஞர் வஸ்வானீ தம்மை ஒரு முஸ்லி மென்று வெளிப்படக் கூருவிட்டாலும், ஒரு பக்கா முஸ்லிம் சூபீயாகவே உயிர்வாழ்ந்திருந் தார். இப் பெரியார் வரைந்துள்ள, இஸ் லாத்தை இனிது விளக்கிக் காட்டும் கட்டு ரைகள் அடிக்கடி நம் சஞ்சிகையில் வெளி யிடப்பட் டிருப்பதை நீங்கள் அறிவீர்கள்.

ப—ர்.]





# எலும்பை எடை போட்ட சிபி

## புராணத்தைப் புறக்கணிக்கும் புண்ணிய சீலர்கட்கு

**1952,** அக்டோபர் தா. இ. த்தில் ஆசிரி யர் அல்ஹாஜ், பா. தா. அவர்கள் ஆராய்ந்து வரைந்திருந்த ''திருக்குறள் தெய்வத் திரு மறையாகுமா?'' என்னும் இனிய கட்டுரை யைப் படித்து இன்புற்ருேம். அக்கட்டுரை யில் சு. ம.க்களின் பார்வைக்கென ஒரு சில புராணக் கதைகள் புகலப்பட் டிருந்தன. இங்கு யான் இனியொரு புராணக் கதையை நம்முடைய சு. ம. சகோதரர்களின் கவனத் துக்கென இதன் கீழே எடுத்தெழுத விழை கிறேன். கதையோ வெகு வின்னியாசம்; அது சூரிய குலத்தில், இராமனுக்கு முன்னே இரகு வம்சத்தில் தோன்றிய சிபி யென்னும் சக்ரவர்த்தியின் புராண வரலாறு யிருக் கிறது. இப் புராணக் கதையை—சு. ம.க்கள் தங்களுக்குரிய 'திராவிடர் திருமறை' என்று ஏத்திப் போற்றும் திருக்குறளில்—வள்ளுவ நயினுரும் அவரால் வரையப்பட்டதாய்க் கரு தப்படும் அந்நூலிலே நுழைத்திருக்கிருர்; இவ் விஷயம் நம் சு. ம. சகோதரர்கட் கெல்லாம் தெரியாம லிருக்க நியாய மில்லை. அந்த ரகு வம்ச புராணக் கதை இதுவா யிருக்கிறது:—

## சிபிச் சக்கரவர்த்தி

### ''சிபிச் சக்கரவர்த்தியின் தன்மை''

''1. பல ஆண்டுகளுக்குமுன், சிபி என்ற அரசர் ஒருவர் இருந்தார். அவர் பல அரசர் களுக்கு அரசர். ஆதலால், அவர் சக்கர வர்த்தி எனப்பட்டார். அவர் எல்லாப் பிராணி கள் இடத்தும் மிகவும் அன்பாய் இருந்தார். எந்தப் பிராணியும் துன்பப்படுவதைக் கண் டால், உடனே அதற்கு வேண்டிய உதவி செய்வார். அதனல் அவர் புகழ் உலகம் முழு வதும் பரவிற்று.

### புரு சிபியை அடைதல்

''2. தேவலோகத்திலும் அவர் புகழ் எட் டியது. உடனே **தேவேந்திரனும், அக்கினி** தேவனும் அவரைச் சோதிக்க நினைத்தார்கள். அதனல் தேவேந்திரன் பருந்தாகவும், அக் கினி பகவான் புருவாகவும் உருவெடுத்த னர். பின்பு பருந்து புருவைத் துரத்திச் சென் றது. அப்போது அந்தப் புரு, சோலையில் அமர்ந்திருந்த சிபிச் சக்கரவர்த்தியின் மடியில் வந்து விழுந்தது. உடனே அது தன்னைத் துரத்தி வந்த பருந்தினிடம் இருந்து காப்பாற் றும்படி கேட்டுக்கொண்டது. சிபியும் காப்ப தாக வாக்குக் கொடுத்தார்.

### சிபியும் பருந்தும்

''3. உடனே புருவைத் துரத்தி வந்த பருந்து சிபியிடம் வந்து, ''அரசே! நான் துரத்தி வந்த புருவை எனக்குக் கொடுங்கள்'' என்று கேட்டது. அதுகேட்ட சிபி, ''புரு என்னிடம் அடைக்கலம் அடைந்தது. அதைக் காப்பாற் றுவதாக வாக்குக் கொடுத்து விட்டேன். ஆதலால், புருவைத் தவிர வேறு ஏதேனும் கேள், தருகிறேன்,'' என்றார். அப்படியானல், புருவின் எடையுள்ள சதையை உமது உட லில் இருந்து தாரும்,'' என்றது பருந்து.

''சிபி அப்படியே தருவதாக ஒப்புக்கொண் டார். தராசு கொண்டு வரப்பட்டது. ஒரு தட்டில் புரு வைக்கப்பட்டது. மற்றொரு தட் டில் தன் உடம்பிலிருந்து கொஞ்சம் சதையை அறுத்து வைத்தார் சக்கரவர்த்தி. எடை சரி யாக இல்லை. தம் உடலில் இருந்த மாமிசம் முழுவதையும் (அறுத்து) வைத்தார். கடைசி யில் (வெற்று எலும்புக்கூடாய் மட்டுமே எஞ்சி நின்ற) தாமே தராசுத் தட்டில் ஏறி அமர்ந்தார். அப்போதுதான் எடை சரியா யிற்று.

''பருந்தாகவும் புருவாகவும் வந்த இந்திர னும், அக்கினியும் சிபியின் அரிய குணத்தைக் கண்டு மகிழ்ந்தனர். அவருக்கு வேண்டிய வரங்களைக் கொடுத்துவிட்டுத் தேவலோகம் சென்றார்கள்......'' *

இக்கதை—மதப்பற்றற்ற நம் பாரத நாட் டுக்குள்ளிருக்கும் சென்னையம்பதியில்—பள் ளிச் சிறுர்களுக்கெனப் பதிப்பிக்கப் பெற் றுள்ள ''நம் நாட்டு வரலாறு'' என்னுந் தமிழ் நூலில் காணப்படுகிறது.

* இனியொரு கதை, இந்திரன் வேடனுய்ச் சென்றுனென்றும், மற்றொரு கதை, புருவுடன் கூடி வல்லூருய் எமதேவன் சென்றுனென்றும் கூற நிற்கும். ப-ர்.

மேற்கூறிய அந்த "நம் நாட்டு வரலாறு," சென்னை, சி. அப்துல் ஹக்கீம் இந்து முஸ்லிம் உயர்நிலைப் பள்ளியின் தலைமை ஆசிரியரால் வரையப்பட்டது; இஃதோர் எம். ஏ. பட்டம் வாங்கியுள்ள ஒரு படித்த (பார்ப்பனரல்லாத) மேதாவியால் "வரலாறு" என்று வெழுதத்தப்படுகிறது. இவ் "வரலாற்றை" நம் சு. ம. பகுத்தறிவு வாதிகள் நம்புகிறார்களா? எனினும், இந்து முஸ்லிம் பள்ளிச்சிறார்கள் இந்த இராமாயணப் புளுகை "நம் நாட்டு வரலாறென" நம்புமாறு இந்த "ராம ராஜ்பத்"திலே பாடம் போதிக்கப் பெறுகிறார்கள்.

இந்தப் புராணக் கதை, "தெய்வப் புலமை திருவள்ளுவ நாயனர் அருளிச் செய்த" தாய்ச் சைவர்களால் சொல்லப்படும் "முப்பாலில்" ஒரு குறட்பாவில் இவ்வாறு நுழைக்கப்பட்டுள்ளது:

"அன்பிலார் எல்லாம் தமக்குரியர்; அன்புடையார் என்பும் உரியர் பிறர்க்கு" (அன்புடைமை, 2).

இதற்கு, எல்லாராலும் ஏற்கப்படும் பரிமேலழகர் எழுதியுள்ள தலைசிறந்த வுரை வருமாறு: '(இ-ள்) அன்பிலார் எல்லாம் தமக்கு உரியர்—அன்பிலாதார் பிறர்க்குப் பயன்படாமையின் எல்லாப் பொருளானுந் தமக்கே யுரியர்; அன்புடையார் என்பும் பிறர்க்கு உரியர்—அன்புடையார் அவற்றானேயன்றித் தம்முடம்பானும் பிறர்க்குரியர்...... "என்பு முரிய"ராதல்; "தன்னகம்புக்க குறுநடைப் புறவின்-றபுதி யஞ்சிச் சீரைபுக்கோன்" முதலாயினர்கட் காணக, (எ—று).

இம் மேற்கோள் "புறநானூறு" 43-ஆம்பாடலில் காணக் கிடக்கிறது. அதில் "தபுத" என்பது, அழிவு அல்லது மரணம் என்று பொருள்படும். "சீரை" என்பது, துலாக் கோல், தராசு என்று பொருள் கொள்ளும். இதில் கூறப்பட்டுள்ள கதை சிபிச் சக்கரவர்த்தி சார்பாயுள்ள புராணக் கதையேயாம். ஈராயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட கடைச் சங்க காலத்திலேயே அப் புலவர்கள் சிபியின் கதையைத் தழுவி நூல்கள் வரைந்துள்ளார்கள் அது காலையே ஆரியரின் இப் புராண வரலாறு இங்குள்ள தமிழர்களை யெல்லாம் பற்றிக்கொண்டு விட்டதென்பது தெளிவாகின்றது.

"இந்திரன்" என்னப்படும் தேவலோகத்தரசன் யார் தெரியுமா? இக் "கற்புக்கரசன்" தான் அகலிகைமீது ஆசை கொண்டு குச்சு நுழைபத் திருட்டுத் தனமாய் வந்து, கௌதம ரிஷியால் சபிக்கப் பெற்றுத் தன்மேனி முழுதும் ஓராயிரம் யோனிகளைப் பெற்றுத் திரும்பிய புண்ணிய சீலனாவான். பேஷ்! பேஷ்!! உடம்பு முழுதும் ஓராயிரம் யோனிகளைப் பெறுவது சாலுமா? அவ்வாறு அத்தனை யோனிகளைப் பெற்றுக் கொண்ட ஒரு மனிதன் உயிருடனே யிருப்பது இயலுமா? என்பனவற்றைச் சிறிதும் சிந்தியாது திருவள்ளுவரும் "இந்திரனே சாலும் கரி" என்று கூறி, அப் புராணக் கதையை ஆமோதித்துள்ளார். "திருக்குறளே தமிழர் வேதம்" என்று வாய்ச் சவடாலடிக்கும் தி. மு. க., தி. பி. க. வின் சு. ம. க்கள் இச் சிபியின் கதையையும் இந்திரன் கதையையும் நம் திராவிட நாட்டு வரலாறுக ளென்றே நம்புகிறார்களா? இச் சு. ம. க்கள் தங்களைப் "பகுத்தறிவு வாதி" களெனப் பயமில்லாது பறைபைந்து கொள்ளுகிறார்களே! பளா! பளா!

தேவலோகம் என்றொரு "பொன்னாடு" எங்கே யிருக்கிறது? அவ் வாகாயமானஸ லோகத்திலே ஓராயிரம் யோனிகளையுடைய இந்திரன் என்பானும், நெருப்புக் கடவுளென்னப்பட்ட அக்னி தேவன் என்பானும் இருக்கிறார்களோ? அவர்கள் நினைத்த வுடனே பருந்தாகவும் புறுவாகவும் உரு மாறக்கூடிய அகடி தகடனு சக்தி வாய்ந்தவர்களோ? இஃது அவர்களது சு. ம. பகுத்தறிவின் பிரகாரம் சாத்தியமாமோ? எம். ஏ. படித்துப் "பாஸ் செய்துள்ள" பட்டதாரிகளாய திருவாளர்கள் அண்ணாத்துரை, நெடுஞ்செழியன், உமாபதி ஆகியவர்களும், இவர்களைப் பின்பற்றும் ஏனை மக்களும் அவ்வரிய புராண வரலாறுகளை யெல்லாம் மெய்யென்றே நம்புகிறார்களா? இது கிடக்க.

அந்தச் சிபிச் சக்கரவர்த்தி தன் மேனியிலிருந்த தசை முழுதையும் அறுத்தறுத்துத் துலாத் தட்டில் வைத்தானும்; அப்பொழுது அத் தசைகளெவ்வளவும் சேர்ந்தும் அந்தக் குறுங்கட் புறவின் எடைக்குச் சரியா யில்லையாம். இக் கதையை அந்தப் "பகுத்தறிவு வாதி"கள் நம்பி ஏற்கிறார்களா? எம் சிற்றறிவுக்கு இது பொருத்தமாய்ப் புலப்படவில்லை; ஒரு கால் அந்த எம். ஏ. படித்துள்ள அறிஞர்கட்கு அது மெய்யெனப் புலப்படக்கூடும் போலும்! பேஷ்! இதுவும் போகட்டும். சிபிச்

(44-ஆம் பக்கம் பார்க்க)



# சுக்கில பக்ஷமா? கிருஷ்ண பக்ஷமா?



## வாதியின் பக்கமா? பிரதிவாதியின் பக்கமா?

நம் தென்னாட்டில் ஆதியில் ஆங்கிலேயன் ஆட்சி ஆரம்பித்த காலத்தில், "சதுர்அமீன் கோர்ட்" என்னும் நாமத்துடனே ஒருவித நீதிமன்றம் நிறுவப்பட்டிருந்தது. அத்தகைய "சதுர் அமீன் கோர்ட்" ஒன்றிலே தலைமை தாங்கிவந்த ஒரு "நீதிபதி" ஒரு "பெரிய மனிதரா"யிருந்தார். உள்ளூரிலே நல்ல மதிப்பு வாய்ந்தவர்; செல்வச் சீமானுமாவார். ஆனால், அவர் ஆங்கிலேயன் சட்டம் அதிகம் அறிந்தவரா யில்லை; அன்னவர்பால் ஒரு "ஹெட் குமாஸ்தா—"ஒரு சிறிதே சட்ட ஞானம் பயின்றவர்—இருந்துவந்தார்; இந்த ஹெட் குமாஸ்தாவே அந்த நீதிபதிக்கு நியாய விஷயங்களை விளக்குவதாய்க் கருதப்பட்டு வந்தார். ஆனாலும், அப்பெரிய "நீதிமான்" தமது சவுகரியத்தை யுன்னி, சுக்கில பக்ஷத்தில்—வளர்பிறையில் 14 நாளும் வாதிகளுக்குச் சாதகமாய்த் தீர்ப்புக் கூறுவதென்றும், கிருஷ்ணபக்ஷத்தில்—தேய்பிறையில்–14 நாளும் பிரதிவாதிகளுக்குச் சாதகமாய்த் தீர்ப்புக் கூறுவதென்றும் ஒரு நிரந்தர திட்டம் வகுத்துக் கொண்டார்.

அப் பெரியவருக்கு ஞாபகசக்தி அதிகமில்லையென்ற காரணத்தால் அவர் அவ்வாறு செய்துகொண்டாரென்று சொல்லப்பட்டு வந்தது; இது பகிரங்கக் காரணம். ஆயின், அதற்கோர் அந்தரங்கக் காரணமும் இல்லாது போகவில்லை. அந்த "மனு நீதி கண்ட நிபுணர்" லஞ்சம் வாங்குவதிலும் மகா நிபுணராகவே விளங்கி வந்தார்; "காற்றுள்ள போதே தூற்றிக்கொள்ள வேண்டும்," என்னும் பொய்யாமொழியை மிகச் செவ்வனம் மெய்ப்பித்துக் காட்டும் "சத்திய சந்தராய்" விளங்கிவரவும் துணிவு கொண்டுவிட்டார். ஆகையால், அவர் தம்பால் வரும் வழக்குகளில் எவருக்கு—வாதியோ பிரதிவாதியோ எவர் அதிக லஞ்சம் கொடுக்கிறார் என்னுங் காரணத்தால் எவருக்குத் தீர்ப்புக்கூற விரும்புகிறாரோ, அவரது கேஸ் வளர்பிறையில், அல்லது தேய்பிறையில் "ஈரங்கி" வருமாறு அந்த ஹெட்குமாஸ்தா தேதி குறிக்க வேண்டும். வாதியின் பக்கம் அவர் தீர்ப்புக்கூற நாடினால், அந்தக் கேஸ் சுக்கில பக்ஷத்தில் வருமாறு ஈரங்கித் தேதி குறிக்கப் படும்; பிரதிவாதியின் பக்கம் அவர் தீர்ப்புக் கூற நாடினால், அந்தக் கேஸ் கிருஷ்ண பக்ஷத்தில் வருமாறு ஈரங்கித் தேதி குறிக்கப் படும்.

இவ்வாறாய நிலையில், வாதியாயிருப்பவனொருவன் ரூ. 25-ம் ஒரு கொழுத்த செம்மறிக் கடாவும் கொண்டு வந்து, நம் நீதிபதியின் புழக்கடையில் "ஐயாவின் ஆபீஸ்பியூ"னிடம் அந்தரங்கமாய்ச் சேர்ப்பித்து விட்டால், அந்த நீதிமான் ஹெட்குமாஸ்தாவிடம் சொல்லி அவன் கேஸை வளர்பிறையில் போடச் சொல்லுவார். இச்செய்தியை யறிந்து கொள்ளும் பிரதிவாதி தன் பக்கம் தீர்ப்பு வரவேண்டுமென விழைந்தால், அவன் இரண்டு கொழுத்த செம்மறிகளையும், ரூ. 50 ரொக்கத்தையும் இரகசியமாய்க் கொண்டு வந்து, அந்த அழகிய நீதிபதியின் கொல்லைப் புறத்திலே அந்த நம்பிக்கைக்குரிய ஆபீஸ் பியூன்வசம் ஒப்படைத்துவிடவேண்டும். அது தெரிந்து, நம் சத்திய சந்தர் தமது அந்தரங்க ஹெட்குமாஸ்தாவை யழைத்து, "ஏ நிஜாம்ஷா பொம்மன்! இவன் கேஸை ஏன் நீர் சுக்கில பக்ஷத்தில் போட்டீர்? அதைத்தூக்கி, கிருஷ்ணபக்ஷத்தில் விசாரணைக்கு வருமாறு தேதி குறிப்பிட்டு ஈரங்கி போடும்!" என்று கோபத்துடன் கூறுவார்.

ஆகவே, அந்த ஹெட்குமாஸ்தா அந்தரங்கத்தில் சிரித்துக்கொண்டே, பகிரங்கத்தில் தேய்பிறையில் ஈரங்கித் தேதி குறிப்பிடுவார். அப்பால் வாதி அதைவிட அதிக லஞ்சம் கொடுத்தால், அந்தக் கேஸ் மறுபடியும் சுக்கில பக்ஷத்துக்குப் போகும்; இதனைப் பிரதிவாதி மிஞ்சிவிட்டால், அதன் பின்னர் அக்கேஸ் மீட்டும் கிருஷ்ண பக்ஷத்துக்கு வந்துவிடும். இவ்வாறாக, எவர் இறுதியில் அதிகமான அளவுக்கு லஞ்சம் சமர்ப்பிக்கிறாரோ அவர் பக்கமே தீர்ப்பு வழங்கப் படும்.

விஷயம் இவ்வாறு இருந்து வருங்கால், ஒரு முறை ஒரு கேஸ் இறுதியாகக் கிருஷ்ண பக்ஷத்தில் விசாரணைக்கு வந்து, பிரதிவாதியின் பக்கம் தீர்ப்புக் கூறப்பட்டது. அஃது அநீதியென்று கண்டவாதி—அந் நீதிபதிக்குப் பெருத்த லஞ்சம் கொடுத்து ஏமாற்ற முற்ற

அந்த வாதி—வயிறெறிந்துபோய், "ஐயா, தர்மபிரபு! தாங்கள் சுக்கில பக்ஷத்தில் தவருது வாதிகள் பக்கம் தீர்ப்பளிக்கிறீர்கள்; கிருஷ்ண பக்ஷத்தில் பிரதிவாதிகள் பக்கமே தீர்ப்பளிக்கிறீர்கள். ஆனால், தாங்கள் சாக்ஷிகள் பக்கம் தீர்ப்பளிப்பது எந்தப் பக்ஷத்திலோ?" என்று வீராவேசத்துடன் வினவி விட்டு, வேகமாய் நடையைக்கட்டி விட்டான்.

---

(42-ஆம் பக்கத் தொடர்)

சக்ரவர்த்தி தன் சரீரத்திலிருந்த தசை முழுதையும் அரிந்துவிட்ட பின்னர் எஞ்சியிருந்த வெற் றெலும்புக்கூடு-சதையற்ற கங்காளம்—எவ்வாறு உயிருடனிருந்தது? அஃதெவ்வாறு தன்னைத் தூக்கி அத் தராசு தட்டில் வைக்கலாயிற்று? ஏ "பகுத்தறிவு வாதி' களெனப் பறையறைந்து கொள்ளும் சு. ம. சகோதரர்களே! மீக் கூறிய புராணக் கதையைப் புளுகன்றென்று புகலத் துணிகின்றீர்களா? சொல்லுங்களே பார்ப்போம்.

ஆயின், அவர்கள்- (சு. ம. க்கள்) திருக்குறளிலுள்ள புராணக் கதைகட்கெல்லாம் வேறு குயுக்தி வியாக்கியானம் கூறத் துணியலாம். அப்பாலும் இக்கால மக்கள் வாழ்க்கைக்குச் சற்றும் பொருந்த முடியாத குறட்பாக்கள் அனந்தம் காணப்படும். களவியல் பொருளீட்டல், போர்முறைகள், அரசாங்க விதிகள் போன்ற பலப்பல விஷயங்கள் இக்கால வுலகுக்குப் பொருத்தமாய்க் காணப்படவில்லை யென்பது கண்கூடு. அவற்றையெல்லாம் நீக்கிவிடலாம் என்று கூசாது கூறுவர் அக் குழாத்தினர். இப்படியே, ஆஸ்திகம், புராணம், ஒவ்வாமை, முன்னுக்குப் பின் முரண்பாடு என்றெல்லாங் கொண்டு, எண்ணிறந்த குறள்களை வெட்டியும், சிதைத்தும், வேறு வியாக்கியானம் வின்னியாசமாய்ச் செய்தும் விட்டால், அப்பால் எஞ்சியிருப்பது யாதா யிருக்குமென் றெண்ணுகிறீர்கள்? மணற் சோற்றிலுள்ள கற்களனைத்தையும் ஆராய்ந்து சோதித்துப் பொறுக்கி யெறிந்து விட்டால், அப்பால், அக் கட்டுச் சோற்று மூட்டையிலே என்ன எஞ்சி யிருத்தல் கூடும்? சிந்தியுங்கள் சீரிய அறிவு படைத்த செம்மல்காள்!

"அன்பன்"

## மதிப்புரை

### "ஹிந்துஸ்தானி நேசன்"

தினசரி நடைமுறைக்கு ஏற்ற விதமாகச் சுலபமாக ஹிந்துஸ்தானியைப் பேசக் கற்றுக் கொடுக்கும் மிக எளிய விதத்தில் ஜனுப் S. அப்துர் ரஜாக் என்னும் உர்து முன்ஷி "ஹிந்துஸ்தானி நேசன்" என்ற தலைப்புடன் சிறிய தமிழ் நூலை வெளியிட் டிருக்கிறார். வினை, விடை, இடைச்சொற்கள், காலம், கிழமைப் பெயர்கள், நிறங்கள், திசைப் பெயர்கள், தன்மைகள், சுவையின் வகைகள், சாப்பாட்டு வகைகள், காய்கறிப் பெயர்கள், பறவை மிருகங்களின் பெயர்கள், சில முக்கிய வார்த்தைகள், தினசரிப் பழக்க வழக்கத்திலுள்ள சொற்கள், சொற்றொடர்கள், சம்பாஷணை வகைகள் முதலிய சகலவற்றையும் வட்டுருக்கமாக இச் சிறிய நூலில் அந்த முன்ஷி அடக்கித் தந்திருக்கிறார். முயற்சி மிகப் பெரிதெனினும், இவ்வளவு நல்லமுறையில் எளிதாக அவர் இலேசுபடுத்தி, சாதாரண மனிதன் ஹிந்துஸ்தானியைப் பேசக் கூடிய அளவில் செய்துவிட்ட பெற்றி பாராட்டற் குரியது. பிரயாணத்தின்போதும், கடைகளில் வியாபாரம் செய்யும்போதும், இன்னம், தினம்தினம் ஏற்படும் சகல சந்தர்ப்பங்களின் போதும் நாம் பொதுவாக என்னென்ன சம்பாஷிப்போமோ, அவையெல்லாம் ஹிந்துஸ்தானியில் நன்கு தரப்பட்டிருக்கின்றன.

இச் சிறு நூலின் விலை 8 அணுத்தான். "ஹிந்துஸ்தானி புக் டெப்போ, ஐயம்பேட்டை என்ற விலாசத்தில் கிடைக்கும்.

---

Regd. No. M. 4950 DARUL ISLAM December 1953

# அசல் அரபுநாட்டுக் கதை

## 1001 இரவுகள்



உலகத்திலுள்ள எல்லா தினுசான கட்டுக் கதைகளுள்ளும் "அரபு நாட்டுக் கதைகள்" என்று சாதாரணமாக அழைக்கப்பட்டுவரும் ஆயிரத்தோர் இரவு (அல்புலைலா வ லைலா) என்னும் அரபு மூலக் கதைகளே ஈடிணையற்றவையாகவும், படிப்போர் உள்ளத்துள் இன்றுங்கூடப் பரவசம் உண்டு பண்ணக் கூடியவையாகவும் விளங்கி வருகின்றன. அந்த அரபு மூலக் கதைகள் முற்றும் இன்றளவும் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டதில்லை. ஆனால், அங்கங்கே காணப்படும் சிற்சில கதைகள் (அலிபாபாவும் நாற்பது திருடர்களும், சிந்துபாத் நாவிதன், கூனன் கதை போன்ற சில கதைகள்) மட்டுமே தாறுமாறாகக் கண்ட கண்ட பேர்வழிகளால் அவ்வப்போது தமிழில் வெளியிடப்பட்டுள்ளன. இந்த 1001 இரவு நூலை மிகவும் சுருக்கி யாரோ ஒருவர் ஆங்கிலத்தில் எப்போதோ வெளியிட்டிருக்கிறார். அந்தச் சுருக்கமான ஆங்கில நூலை, அரபுப் பெயரை எப்படி உச்சரிப்பதென்று கூடத் தெரியாத சில பேர்வழிகள் கண்மூடித்தனமாகத் தமிழில் மொழிபெயர்த்து, "இதுதான் அசல் அரபுநாட்டுக் கதை!" என்று தமிழுலகத்தில் இப்போது பறையறையத் தொடங்கியிருக்கின்றனர். அக் கூற்றுக்களை நம்பாதீர்கள். அரபு நாட்டுக் கதையின் அசல் அரபு மூலம் தற்சமயம் தமிழ்நாட்டில் எம்மைத் தவிர வேறு எவருடைய கையிலும் இல்லை.

1001 இரவுகளில் சொல்லப்பட்ட எல்லாக் கதைகளையும் நாம் அசல் அரபு மூலத்திலிருந்து மொழிபெயர்த்து வைத்திருக்கிறோம். அதை அப்படியே முற்றும் அச்சிட்டு ஏக காலத்தில் விற்க முற்படுவோமானால் நீங்களும் அதை இலேசாக வாங்க முடியாது. எம்மாலும் அச்சிட்டு விற்க இயலாது. எனவே, அந்த மிகப் பெரிய மலைபோன்ற இலக்கியக் குவட்டை 2 மாதங்களுக் கொன்றாகத் தொடர்ந்தாற்போல் சிற்சிறு வெளியீடுகளாக, "அரபு நாட்டுக் கதை" என்ற பெயருடன் மிகச் சொற்ப விலையில் வினியோகிக்கத் திட்டமிட்டிருக்கிறோம்.

அசல் அரபு மூலத்தின் மொழிபெயர்ப்பு நல்ல தமிழில் அழகாக அச்சிடப்பட்டு, முதல் வெளியீடும், இரண்டாவது வெளியீடும் இப்போது விற்பனைக்குத் தயாராகி விட்டன. ஒவ்வொரு வெளியீடும் பிரதியொன்று ஒரு ரூபாய் விலையில் கிடைக்கும். ஒவ்வொரு வெளியீடும் நாகரிகமான மூவர்ண ஆர்ட் அட்டையுடன் கண் கவரும் வண்ணம் மிளிர்கின்றது. இரு வெளியீடுகளும் தேவைப்படுவோர் தபால் செலவுட்பட ரூ. 2-10-0 மணியார்டர் செய்யவும். முதல் வெளியீடு இன்னம் சொற்பப் பிரதிகளே கைவசமுள்ளன.

அடுத்தாற்போலே மூன்றாவது, நான்காவது......வெளியீடுகள் ஒன்றுக்குப் பின்னொன்றாக வெளிவந்து கொண்டேயிருக்கும். ஒவ்வொரு வெளியீடும் ஒவ்வொரு ரூபாய் விலையிலேயே கிடைக்கும். விலைமதிப்பில்லா அசல் அரபு நாட்டுக் கதைகளின் நிஜமான மொழிபெயர்ப்பை நீங்கள் இப்படிச் சுலபமாகச் சிறுகச் சிறுக வாங்கி, உங்கள் நூல் நிலையத்தில் "அல்புலைலா வ லைலா" என்னும் மதிப்பேறிய இலக்கியப் பொக்கிஷத்தை முற்றிலும் நிரப்பிவிடலாம். உடனே முந்துங்கள்!

**ஷாஜஹான் புக் டெப்போ,**

**460, திருவல்லிக்கேணி ஹைரோட் :: சென்னை-5.**

Printed by V. Natarajan at Navabharat Press 2/141 Broadway Madras—1
Published by I. Abdur Rahman, at "DARUL ISLAM," 460, Triplicane High Road Madras—5

